

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை.

# குரு அருள் வேட்டல்



ஆக்கியோன் :—

## திருவடிதாசன்



25—8—1973ல்

வேலூர் வருமானவரி ஆடிட்டர்,

உயர்திரு. V. D. ஜானகிராம முதலியார்

அவர்கள் மணிவிழா நாளில்

வெளியிடுவோர் :

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்

இலக்கியப் பதிப்பகம்

32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை - 1.

( தொலைபேசி : 34600 )

இலக்கியப் பதிப்பக வெளியீடு எண் : 9
முதற் பதிப்பு 1000 பிரதிகள்
25—8—1973

ஓம்

## சமர்ப்பணம்

எல்லாம் வல்ல ஸ்ரீ குருபரம் பொருளின் அருட் பெருங்கருணையே திருமேனியாகக் கொண்டு விளங்கி, அருட்சுட்ட அடியவர் அனைவர்க்கும் அரும் பெருந் துணையாய்த் திகழ்ந்து, இம்மை, மறுமை நலங்கள் வழங்கி, அருளாட்சி புரிந்து வரும்

**ஸ்ரீலஸ்ரீ அருட்சக்தி அன்னையார்**

அவர்களின் திவ்ய திருச்சமூகங்கட்கு இந்நூலைச் சமர்ப்பிக்கின்றேன்.

ஆண்டவர் அருள், திருவடிதாசன் !

இந்நூல் வெளிவரப் பொருளுதவி புரிந்தவர் :—
உயர்திரு.

**V. D. ஜானகிராம முதலியார் அவர்கள்**
வருமானவரி ஆடிட்டர், வேலூர். (வ. ஆ)

குமரன் பதிப்பகம், வேலூர்—12. (வ. ஆ.)

ஓம்

## பிள்ளையார் குப்பம்

# ஸ்ரீலஸ்ரீ அருட்சக்தி அன்னையார் அவர்களின்

# ஆசியுரை



ஆண்டவர்மீது அளவிலா அன்பு கொண்டு அருட்சட்ட நெறியில் வாழ்ந்துவரும் உயர்திரு. பாலகவி. M. K. வேங்கட ராமன் அவர்கள் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்மீது பல பாடல்களை இயற்றியுள்ளார். இந்நூலில் அமைந்துள்ள பாடல்கள் மிகச் சிறப்பாக உள்ளன. ஆண்டவர் அருள் மேலும் ஓங்குவதாக !

இந்நூல் வெளிவரப் பொருளுதவி புரிந்த வேலூர் ஆடிட்டர் திரு. V. D. ஜானகிராம முதலியார் அவர்கள் குடும்பம் மேலும் ஓங்குவதாக !

திருவருள். அன்பார்ந்த,

அருள் சக்தித்தாய்.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள்

ஓம்

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# பதிப்புரை



திருவருளே திருமேனியாகக் கொண்டு கி. பி. 1856ல் திருநெல்வேலி மாவட்டத்தில் கோவில்பட்டிக்கு 28 மைல் தொலைவிலுள்ள நாகலாபுரத்தை அடுத்துள்ள ஸ்ரீ இரெட்டியப் பட்டியில் சுப்ரமண்யம் என்னும் திருப்பெயருடன் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருஅவதாரம் செய்தார்கள். மதுரை மாநகரில் ஸ்ரீ பரிபூர்ண விநாயகர் திருக்காட்சி கண்டார்கள். பொதிகை மாமலையில் பல்லாண்டு அருந்தவம் புரிந்து அருட் பரிபூர்ணம் பெற்றார்கள். எல்லா உயிர்களும் இனம், மதம், மொழி, வயது முதலிய எவ்விதப் பாகு பாடுமின்றி, கடைப்பிடித்து ஒழுகி, தூய நல்வாழ்வும், உயர்பரகதியும் பெற்றுய்யத்தக்க செநெறியொன்றை 'சட்டம்' என்ற பெயரால் உலகுக்கு வகுத்து வழங்கி அருளரசாட்சி புரிந்து வருகிறார்கள்.

அவர்களைத் துதித்து வழிபட்டு திருவருள் பெறற்கு இந்நூல் பயன்படக் கூடியதாய் அமைந்துள்ளது. இதன்கண் பலவகையான பா இனங்கள் உள்ளன.

1. முதல் திரு அகவல் ஓம் எனும் பிரணவ மந்திரத்தை ஆதியாகக் கொண்டு தொடங்கி, வாழ்க, வெல்க, காண்க, அருள்க என நான்கு பகுதிகளாக அமைந்துள்ளது.

2. இரண்டாம் திரு அகவல் திருவடியைப் போற்றும் முறையில் 'போற்றி' என்ற சொற்களைக் கொண்ட 128 அடிகளால் அமைந்துள்ளது.

3. மூன்றும் திரு அகவல் ஜெய ஜெய கீதம்.

4. நான்காம் திரு அகவல் சுவாமிகளின் திருஅருட் புகழைக் கூறித் துதிக்கும் முறையில் அமைந்துள்ளது.

5. 'குருபரம் பொருள்' என்ற தலைப்பில் எழுத்து வரிசையில் தொடங்கும் அடிகளைக் கொண்ட அக்ஷரமணி மாலை 'குருபரம் பொருளே' என 100 முறை விளித்துப் போற்றும் முறையில் அமைந்துள்ளது.

6. அருள்மோன குருமாலை அதிசயம், உயர்வு, நன்று, தயைபுரிய வேண்டும், வேண்டும், வருக, தருக, அருள்க, வாழ்க, வெல்க, போற்றி என்ற 11 அம்சங்களைக் கொண்டதாக அமைந்துள்ளது.

7. அருளவேண்டும் குருவே.

8. ஆனந்த அமுதருள் நாதன்.

9. உனைப் பிரியாதிருக்க ஒரு வரம் தரல் வேண்டும் என்று உள்ள மூன்றும் இசையுடன் பாடத்தக்க கீர்த்தனை களாக அமைந்துள்ளன.

10. 'அருள் துணை துணிவு' என்ற தலைப்பில் உள்ள 11 பாடல்களும் மற்றுப் 'பற்றெனக்கின்றி' என்று தொடங்கும் தேவாரப் பண்ணில் அமைந்துள்ளன.

11. 'தவம் வேட்டல்' என்ற தலைப்பில் உள்ள 11 பாடல் களும் புலனடக்கம் பெற்றுத் தவநிலை பேணி உய்ய அருள் புரியுமாறு பிரார்த்திக்கும் முறையில் அமைந்துள்ளன.

12. 'அருள் வேட்டல்' என்ற தலைப்பில் உள்ள 51 பாடல்களும் குருநாதர் திருவருளைக் குறையிரந்து வேண்டும் துறையில் அமைந்துள்ளன.

13. 'எங்கள் குருநாதன்' என்ற இறுதியையுடைய அடிகள் அகரம் முதலிய உயிர் எழுத்துகளைக் கொண்டு தொடங்கி, குருநாதன் அருள் நிலையைப் போற்றும் வகையில் அமைந்துள்ளன.

14. 'நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா' எனத் தொடங்கும் ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தில் உள்ள கருத்தைப் போல, குருநாதர் திரு அருளைப் பெறுவதற்கு நாம் செய்ய வேண்டிய திருத்தொண்டு களைக் குறிக்கும் முறையில் நெஞ்சினுக்கு உபதேசிக்கும் முறையில் அமைந்துள்ளது.

15. திரு அங்கமாலை, நெஞ்சு, கண், வாய், கால், கை, காது, தலை, உடம்பு, மூக்கு முதலிய உடம்பு உறுப்புகளை விளித்து, குருநாதன் திரு அருள் பெற்று உய்ய உதவும்படிக் கூறுவதும், பிறவியென்றும் பிணியை விளித்து, 'நீங்கிச் செல்' என்று கூறுவதுமாக அமைந்துள்ளது.

16. வாழ்த்துப்பா இருடிநகர் குருநாதர் அருட்சட்ட மாண்பு அடியார் அன்பர் வாழ்க என்று கூறி, எல்லா உயிர் களும் பொன் புகழ் மெய்யின்பம் யாவும் எய்தி வாழ்க என்ற மங்கள வாழ்த்தாக அமைந்துள்ளது.

இந்நூலை ஆக்கித் தந்த உயர்திரு. திருவடிதாசன் அவர்கட்கும், இந்நூலை வெளியிடப் பொருளுதவி புரிந்துள்ள வேலூர் வருமானவரி ஆடிட்டர் உயர்திரு. V. D. ஜானகிராம முதலியார் அவர்களுக்கும், இனிது அச்சிட்டுத் தந்த வேலூர் குமரன் பதிப்பகத்தினர்க்கும், அச்சுத் திருத்தியுதவிய தமிழறிஞர் திரு. மு. பெருமாள் முதலியார் அவர்கட்கும், இந்நூல் வெளியீட்டு விழாவிற்குத் தலைமை வகிக்க இசைந்

தருளிய உயர்தவத்திரு. அருள் சக்தி அன்னையார் அவர்களுக்கும், இந்நூலைச் சபையின்கண் வெளியிட இசைந்தருளிய 'அருள்மொழி அரசு' திருமுருக. கிருபானந்த வாரியார் சுவாமிகட்கும் இதனை வாசிக்கும் அடியவர் அன்பர்கட்கும் எமது உளங்கனிந்த நன்றி உரித்தாகுக !

வாழ்க குரு அருள் ! வளர்க அருள் நெறி !!

இங்ஙனம்,

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்

சென்னை.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை.

# I. முதல் திரு அகவல்

## வாழ்க – வெல்க – காண்க – அருள்க

### [ வாழ்க ]

ஓமென ஓங்குபே ரொலிமயம் வாழ்க
நாமமும் உருவுமில் நற்சுடர் வாழ்க
இருடியர் பட்டியில் இலங்குநன் வாழ்க
மருள்தனை மாற்றிட வல்லவன் வாழ்க
மறையினுட் பொருள்நவில் மாண்பினன் வாழ்க
குறையனைத் தும்தவிர் கொற்றவன் வாழ்க
எகம் அநேகமாம் எம்பரன் வாழ்க
போகம் அனைத்தும் புணர்ப்பவன் வாழ்க

அந்தமும் ஆதியும் ஆனவன் வாழ்க
சிந்தையி னுள்திகழ் தேசிகன் வாழ்க
ஐம்பொறி புலன்களை அடக்குநன் வாழ்க
செம்பொருள் தெளிவுறச் செய்பவன் வாழ்க
வித்திலா தெவையும் விளைப்பவன் வாழ்க
தத்துவா தீதத் தனிப்பொருள் வாழ்க
கற்கனி யப்புரி கருணையன் வாழ்க
சொற்கொ டளப்பரும் ஜோதியன் வாழ்க

நாதாந்த ஜோதி நடுவுளான் வாழ்க
போதாந்த மாகிப் பொலிபவன் வாழ்க
அன்பினுக் கிரங்கி யருள்பவன் வாழ்க
என்பிழை பொறுக்கும் இங்கிதன் வாழ்க
அல்லெனப் பகலென ஆனவன் வாழ்க
சொல்லெனப் பொருளெனச் சூழ்பவன் வாழ்க
எண்ணும் எழுத்துமாம் இறையவன் வாழ்க
கண்ணும் கருத்துமாம் காரணன் வாழ்க 24

வாக்குமனம் தொடா வடிவினன் வாழ்க
போக்கு வரவிலாப் பூரணன் வாழ்க
எண்ணிய எண்ணியாங் கீபவன் வாழ்க
புண்ணியர் குழுவினுட் பொலிபவன் வாழ்க
பத்தர் உளத்தினுட் படர்பவன் வாழ்க
சித்தர் குழாத்துட் சிறப்பவன் வாழ்க
பொன்புகழ் வழங்கிப் புரப்பவன் வாழ்க
இன்பமெல் லாம் தரும் எம்மிறை வாழ்க 32

[ வெல்க ]

அன்னையென் அத்தன்என் ஆரியன் வெல்க
முன்னைஎன் வினைகள் முடிப்பவன் வெல்க
என்மனத் திச்சையை எரிப்பவன் வெல்க
புன்மையேன் கோபம் பொடிப்பவன் வெல்க
ஏழு தாதுக்களை இயக்குநன் வெல்க
சூழ்வுறு பவங்கள் தொலைப்பவன் வெல்க
மூன்று மலங்களை முறிப்பவன் வெல்க
தோன்று சுடரெனச் சூழ்பவன் வெல்க 40

ஆரணம் ஆகமம் ஆனவன் வெல்க
காரண காரியம் கடந்தவன் வெல்க
நித்தியா னந்த நிராமயன் வெல்க
சத்தியா யெங்கும் தழைபவன் வெல்க

புத்தியா யென்னுட் பொலிபவன் வெல்க
முத்தியாய் விளங்கும் முழுமுதல் வெல்க
சிட்ட ரெலாம்பணி சீரியன் வெல்க
அட்டமா சித்தி அருள்பவன் வெல்க 48
அகவொளி புறவொளி யானவன் வெல்க
இகசுகம் பரசுகம் ஈபவன் வெல்க
திருவருட் செங்கோல் செலுத்துநன் வெல்க
கருவுட் புகாநெறி காட்டுநன் வெல்க
வனத்தை நாடாக்கிட வல்லவன் வெல்க
மனத்தைத் திருத்தியாள் மன்னவன் வெல்க
கங்கையை விடியலிற் காட்டுநன் வெல்க
செங்கையா யிரமுடைத் தேசிகன் வெல்க 56

சத்தொடு சித்தாய்ச் சமைந்தவன் வெல்க
அத்துவி தமதாய் அமைந்தவன் வெல்க
நன்மை யனைத்துமாய் நண்ணினன் வெல்க
தின்மை யனைத்தும் சிதைப்பவன் வெல்க
மோகம் அனைத்தும் மோசிப்பவன் வெல்க
வேக மறுத்தருள் வேதியன் வெல்க
அகந்தைக் கிழங்கை யகழ்பவன் வெல்க
சுகந்தந் தெனுட்பொலி ஜோதியன் வெல்க 64

[ காண்க ]

பாரென எங்கும் பரந்தவன் காண்க
நீரென எங்கும் நிறைந்தவன் காண்க
ஊற்றென எங்கணும் ஊறுநன் காண்க
காற்றென எங்கும் கலந்தவன் காண்க
அழலென எங்கும் அமைந்தவன் காண்க
நிழலென எங்கும் நிமிர்ந்தவன் காண்க
வெளியென எங்கும் விளங்குநன் காண்க
அளியென எங்கும் அமர்ந்தவன் காண்க 72

இனிப்பென அடியார்க் கிருந்தனன் காண்க
தனிப்பர சுகத்தைத் தருபவன் காண்க
அறுவகைச் சுவையும் ஆனவன் காண்க
அறுவகைப் பகையை அறுப்பவன் காண்க
நெருப்பினுள் நெருப்பென நிற்பவன் காண்க
விருப்பொடு வெறுப்பிலா விண்ணவன் காண்க
வீறொடு விளங்கிடும் வித்தகன் காண்க
கூறரி தாம்புகழ்க் குருபரன் காண்க

செந்தமிழ்க் கவிபல செப்பினன் காண்க
பைந்தமிழ்த் தொடையணி பார்த்திபன் காண்க
பொதிகையில் தவம்புரி புங்கவன் காண்க
அதிகமாய் அருளமு தளிப்பவன் காண்க
இணையில் செந்நெறியொன் றீந்தவன் காண்க
புணையெனப் பவக்கடற் போந்தவன் காண்க
காணரி தாம்சுகம் காட்டுநன் காண்க
பூணரி தாம்புகழ் பூண்பவன் காண்க

வேதியன் காண்க விழுமியன் காண்க
நீதியன் காண்க நின்மலன் காண்க
நீற்றினுற் பிணிபல நீக்குநன் காண்க
கூற்றை வெல்லப்புரி குருபரன் காண்க
தீர்த்தம் வழங்கியாள் சின்மயன் காண்க
ஆர்த்தர்கட் கின்னமு தாயினன் காண்க
அடிபர வடியார்க் கருந்துணை காண்க
முடிவிலாச் சுகமாய் முளைப்பவன் காண்க

[ அருள்க ]

மூலமாம் கனலாய் மூள்பவன் அருள்க
காலதே சாதி கடந்தவன் அருள்க
ஆலம் விண்ணமுதாய் ஆக்குவோன் அருள்க
மூல பண்டாரமாம் முன்னவன் அருள்க

பந்தமெல் லாமறப் பண்ணுவோன் அருள்க
நந்தலில் லாச்சுகம் நல்குவோன் அருள்க
உண்மையெல் லாமும்உள் ஓதுவோன் அருள்க
நுண்மையுள் நுண்மையாம் நோன்மையோன் அருள்க 104

துள்ளல் தவிர்த்தெனுட் சூழ்நலோன் அருள்க
வள்ளலென் றருள்நனி வழங்குவோன் அருள்க
தெருட்பெருங் கடலெனத் தேங்கினோன் அருள்க
அருட்பெருஞ் ஜோதியொன் றாயினோன் அருள்க
சட்டமென் றருள்நெறி தந்துளோன் அருள்க
கட்டமெல் லாம் தவிர் கருணையோன் அருள்க
பகலவ னுக்கொளி படைத்தவன் அருள்க
புகலளித் தாண்டருள் புரவலன் அருள்க 112

மதியெனத் தண்ணொளி வழங்குவோன் அருள்க
நிதியெனச் சிந்தையுள் நிறைபவன் அருள்க
கண்டிடும் பொருள்களைக் காட்டுவோன் அருள்க
உண்டிடும் நல்லமு தூட்டுவோன் அருள்க
விண்டிடும் சொற்களாய் விரிபவன் அருள்க
விண்டிடற் கருமறை விளம்புவோன் அருள்க
தொண்டரைக் கூட்டிடும் தூயவன் அருள்க
மண்டலத் தருளொளி வளர்ப்பவன் அருள்க 120

உம்பரு மறியொணா உயர்வினன் அருள்க
நம்படி யவரையாள் நாயகன் அருள்க
வேதமோ தாதுணர் விற்பனன் அருள்க
பாதமென் முடிமேற் பதிப்பவன் அருள்க
ஒப்புயர் வற்றொளிர் உத்தமன் அருள்க
கைப்பொரு ளாயெனைக் காப்பவன் அருள்க
இரண்டறக் கலந்தருளீபவன் அருள்க
அரண்தரும் குருபதம் அருள்க மெய்ச்சுகமே 128

---

1 ஆர்த்தர்=யோகிகள்

# 2. இரண்டாம் திரு அகவல்

## திருவடிபோற்றி

ஓங்கார மாகி யொளிர்வோன் அடி போற்றி
நீங்காமல் எங்கும் நிறைந்தோன் அடி போற்றி
ஐம்பூத மாகி அமைவோன் அடி போற்றி
செம்பாக மாகித் திரள்வோன் அடி போற்றி
ஓதா தனைத்தும் உணர்ந்தோன் அடிபோற்றி
தீதான எண்ணம் சிதைப்போன் அடி போற்றி
கற்றாரைக் காக்கும் கவின்சேவடி போற்றி
பற்றான வைதீர் பரன்சே வடிபோற்றி
கலையாய்த் தொழிலாம் கவிஞ ரடிபோற்றி
நிலையாய் உளத்துள் நிலைத்தோன் அடி போற்றி

அன்பின் வடிவா யமைந்தோன் அடி போற்றி
இன்பம் பலவு மெனக் கீவோன் அடி போற்றி
நம்பன் அடிபோற்றி நாதன் அடி போற்றி
செம்பொன் என உள் திகழ்வோன் அடி போற்றி
அன்னையொ டென்னப்பன் ஆனான் அடி போற்றி
பின்னொடு முன்னாய்ப் பிணைந்தோன் அடி போற்றி
சத்தென எங்கும் தழைவோன் அடி போற்றி
சித்தென எங்கும் செழிப்போன் அடி போற்றி
ஊனம் தவிர்த்துள் ஒளிர்வோன் அடி போற்றி
ஞானந் தனையுள் நவில்வோன் அடி போற்றி

மோனந் தர உள் முளைப்போன் அடி போற்றி
ஆனந்தமாகி அமைவோன் அடி போற்றி
நேயன் அடிபோற்றி நிமலன் அடி போற்றி
தூயன் அடிபோற்றி துரியன் அடி போற்றி
ஆதி நடுஅந்தம் ஆனான் அடி போற்றி
நீதி வடிவாய் நிமிர்ந்தோன் அடி போற்றி
அறமாய்ப் பொருள் இன்பம் ஆனான் அடி போற்றி

புறமாய் அகமாய்ப் பொலிவோன் அடி போற்றி
வேதம் பலவாய் விரிந்தோன் அடி போற்றி
நாத முடிமேல் நடிப்போன் அடி போற்றி
ஐம்பொறிக் கெட்டா அறவோன் அடி போற்றி
உம்பரும் காணு உரவோன் அடி போற்றி
மும்மை மலங்கள் முறிப்போன் அடி போற்றி
செம்மை முழுதருளும் சீரோன் அடி போற்றி
சீரார் அடியவர்பால் சேர்வோன் அடி போற்றி
ஆரா வமுதாய் அமைவோன் அடி போற்றி
இன்பமும் துன்பமும் இல்லான் அடி போற்றி
அன்பருக் கன்பனென் றுஞன் அடி போற்றி
ஆற்றை விளக்கி யருள்வோன் அடி போற்றி

கூற்றை வெலச்செய் குரவோன் அடி போற்றி
உலவா எழில்மயமாய் உள்ளான் அடி போற்றி
நிலவாய்க் கதிராய் நிறைந்தான் அடி போற்றி
அருளறி வூட்டுமென் ஆசான் அடி போற்றி
இருளறுத் தென்னுள் இருப்போன் அடி போற்றி
ஆசறுத் தன்மை அருள்வோன் அடி போற்றி
[illegible]தசென எங்கும் திகழ்வோன் அடி போற்றி
கற்பனைக் கெட்டாக் கவின்சே வடி போற்றி
பொற்பு மிகுந்துட் பொலிவோன் அடி போற்றி
கண்ணின் மணியாய்க் கலந்தான் அடி போற்றி
புண்ணியர் குழுவைப் புரப்போன் அடி போற்றி

இரவும் பகலு மிலான்சே வடி போற்றி
கரவொன் றறியார்க் கருள்வான் கழல் போற்றி
தேவை குறைத்துட் செறிவோன் கழல் போற்றி
பூவை நிகர்க்கும் பொலன்சே வடிபோற்றி
பத்திப் பழமாய்ப் பழுத்தோன் அடி போற்றி
எத்திக்கும் போற்றும் இறைவன் அடி போற்றி
தீராப் பிணிபலவும் தீர்ப்போன் அடி போற்றி
நீரா யுருகச்செய் நித்தன் அடி போற்றி
ஏக வழியருளும் ஏகன் அடி போற்றி
யோகப் பயன்அருளும் யோகி அடி போற்றி

கால வரம்பைக் கடந்தோன் அடி போற்றி
ஞாலம் திருந்த நவின்றோன் அடி போற்றி
தவத்தின் நிறைவாய்ச் சமைந்தோன் அடி போற்றி
பவத்தைப் பொடிக்கும் பரன்சே வடி போற்றி
வினையைக் களையும் வியன்சே வடி போற்றி
எனையும் திருத்த இசைந்தோன் அடி போற்றி
கண்ணு ரொளியாம் கமலக் கழல் போற்றி
விண்ணு ரமுதாய் விளையும் கழல் போற்றி
மலரில் மணமாய் மலிந்தான் அடி போற்றி

கலையில் கவினாய்க் கலந்தான் அடி போற்றி
பொழிலின் எழிலாய்ப் பொலிவான் அடி போற்றி
தொழிலின் திறம்பலவாய்ச் சூழ்வான் அடி போற்றி
வானுள் ஒலியாய் வதிவோன் அடி போற்றி
தேனுள் இனிப்பாய்ச் செறிந்தோன் அடி போற்றி
காற்றுள் உணர்வாய்க் கலந்தான் அடி போற்றி
மாற்றறி யாப்பொன் மணியாம் அடி போற்றி
தீயுள் ஒளியாய்த் திகழ்வான் அடி போற்றி
வேயினுள் முத்தாய் விளைவான் அடி போற்றி
அப்பினுள் தட்பமாய் ஆர்ந்தான் அடி போற்றி
எய்ப்பில் வைப் பாகி இருந்தான் அடி போற்றி

மண்ணில் வளமாய் மலிந்தான் அடி போற்றி
எண்ணில் பொருளாய் இருப்பான் அடி போற்றி
காணற் கரிதாம் கவினாரடி போற்றி
பேணத் தகும் எம் பிரான்சே வடி போற்றி
உடையான் எனஎங்கும் உள்ளான் அடி போற்றி
கடையேன் சிரமேற் கவின்செய் யடிபோற்றி
சித்தன் அடி போற்றி சீமான் அடி போற்றி
முத்தன் அடி போற்றி மூர்த்தி அடி போற்றி
கர்த்தன் அடி போற்றி காப்போன் அடி போற்றி
அர்த்தன் அடி போற்றி ஆப்தன் அடி போற்றி

சத்துவ மாகிச் சமைந்தோன் அடி போற்றி
தத்துவ மெல்லாம் கடந்திலகுதாள் போற்றி
என்னறி வுக்கறி வீவோன் அடி போற்றி
என்னுயி ருக்குயிர்ப் பீந்தோன் அடி போற்றி
என்னையும் ஈர்த்தான் எழிற்சே வடி போற்றி
மன்னுபே ரின்ப மயமாம் அடி போற்றி
இருடியர் பட்டிவாழ் எம்கோன் அடிபோற்றி
திருடி யுளம்கோயில் செய்தான் அடி போற்றி
வீரபத் திரர்நல்கு வேந்தன் அடி போற்றி
கோரும் வரங்கள் கொடுப்பான் அடி போற்றி

ஆவுடை யம்மை அருள்சேய் அடி போற்றி
தேவுரு வாயுள் திகழ்வான் அடி போற்றி
சுப்பிரமணியப் பேர்த் தூயோன் அடி போற்றி
எப்பொழுதும் துணையாம் எம்மான் அடி போற்றி
அருளே நிறைந்த அழகன் அடி போற்றி
தெருளே வழங்கும் திறலோன் அடி போற்றி
கூடல் நகரிற்குலாவும் அடி போற்றி
ஆடல் பல அருளால் ஆற்றும் அடி போற்றி
பொதிகையில் நோற்ற புனிதன் அடி போற்றி
பதிதொறும் சென்றருளைப் பரப்பும் அடிபோற்றி

சிறியரைப் பெரியராச் செய்வோன் அடி போற்றி
வறிஞரைச் செல்வராய் மாற்றும் அடி போற்றி
அடியாரைத் தேர்ந்தன் பருள்வோன் அடி போற்றி
நொடியினுள் உண்மை நுவல்வோன் அடி போற்றி
பழஅடி யாருட் பழுத்தோன் அடி போற்றி
அழுது தொழுவோர்க் கருள்வோன் அடி போற்றி
புத்தடி யவருட் பொலிவோன் அடி போற்றி
சித்துக ளெல்லாம் செறிந்தோன் அடி போற்றி
அருட் பள்ளி வைத்த ஆசான் அடி போற்றி
மருட் பகையை மாய்க்கும் மன்னன் அடி போற்றி

ஐயன் அடி போற்றி அமுதன் அடி போற்றி
செய்ய புகழ்மேனிச் செல்வன் அடி போற்றி
எந்தை அடி போற்றி எம்கோன் அடி போற்றி
நிந்தை தவிர்த்தாண்ட நீதன் அடி போற்றி
உருவாய் அருவாகி யுள்ளான் அடி போற்றி
குருவாய் எனையாண்ட கோமான் அடி போற்றி
போற்றி அடியரையாள் புனிதன் அடி போற்றி
போற்றி உலகெல்லாம் புரப்போன் அடி போற்றி 128

# 3. மூன்றும் திரு அகவல்

## [ஜெய ஜெய கீதம்]

அருளாய் அவனியில் அமைவோய் ஜெய ஜெய
குருவாய் எனையாட் கொண்டோய் ஜெய ஜெய
இருடியர் பட்டிஎம் ஈசா ஜெய ஜெய
வருதியென் றெனையாள் வள்ளால் ஜெய ஜெய
ஊனாய் உயிராய் உள்ளாய் ஜெய ஜெய
வானார் அமுதாய் வதிவாய் ஜெய ஜெய
ஞானா கரநெறி நவில்வாய் ஜெய ஜெய
தேனாய் இனிப்பாய்த் திகழ்வாய் ஜெய ஜெய
மதுரையில் தங்கிய மன்னா ஜெய ஜெய
மதுரித கவிசொல் மாண்போய் ஜெய ஜெய

குற்றா லத்துறை கோனே ஜெய ஜெய
உற்றார் பலருள் உயர்ந்தோய் ஜெய ஜெய
அன்னே ஜெய ஜெய அப்பா ஜெய ஜெய
இன்னே எனையாள் இறைவா ஜெய ஜெய
தவமுனி வோர்தம் தலைவா ஜெய ஜெய
நவமணி யொளியாம் நம்பா ஜெய ஜெய
கல்விப் பயனைக் கண்டோய் ஜெய ஜெய
செல்வம் பலவாய்த் திரள்வோய் ஜெய ஜெய
உண்மைப் புகழ்கொள் ஒருவா ஜெய ஜெய
திண்மை மிகும் தவத் திறனே ஜெய ஜெய

சிந்தா மணியாய்த் திகழ்வோய் ஜெய ஜெய
நந்தா விளக்காம் நாதா ஜெய ஜெய
பந்தா டவியைப் பறிப்போய் ஜெய ஜெய
சிந்தா குலம்தீர் செல்வா ஜெய ஜெய
மந்தா கினியே மணியே ஜெய ஜெய
எந்தா யினுமிக இனியாய் ஜெய ஜெய

பொன்னாய் மணியாய்ப் பொலிவாய் ஜெய ஜெய
என்னா ருயிராம் இறையே ஜெய ஜெய
செய்தற் கரியது செய்தாய் ஜெய ஜெய
உய்தற் குரிய சொல் ஒருவா ஜெய ஜெய

பழியொன் றற அருள் பதியே ஜெய ஜெய
வழியொன் றினிதருள் வாழ்வே ஜெய ஜெய
திருவருள் நெறிதரு தீரா ஜெய ஜெய
குருவருள் எனுமுருக் கொண்டோய் ஜெய ஜெய
பத்தித் திருநெறி பகர்வோய் ஜெய ஜெய
முத்தித் திறம்நனி மொழிவோய் ஜெய ஜெய
தவநிறை வெனவுள் தழைவோய் ஜெய ஜெய
சிவவொளி திகழச் செய்வோய் ஜெய ஜெய
அவநெறி செல்லா தாள்வோய் ஜெய ஜெய
உவமை யிலா அரு ளொளியே ஜெய ஜெய

உம்பரும் அறியா உயர்வே ஜெய ஜெய
செம்பொருள் எனஉள் திகழ்வோய் ஜெய ஜெய
உள்ளம் கவர் பேரொளியே ஜெய ஜெய
கள்ளம் களையும் கண்ணே ஜெய ஜெய
நல்லார் தமையாள் ஞானீ ஜெய ஜெய
சொல்லா மறையுட் சொல்வோய் ஜெய ஜெய
கற்கனி யப்புரி கனியே ஜெய ஜெய
சிற்கன லெனஉள் திகழ்வோய் ஜெய ஜெய
வேதாந் தத்தின் விரிவே ஜெய ஜெய
போதாந்தத்தின் பொலிவே ஜெய ஜெய

வித்தாய் அருளாய் விளைவாய் ஜெய ஜெய
சித்தாய்ச் சுகமாய்த் திகழ்வாய் ஜெய ஜெய
குறியொன்றென அருள் கோவே ஜெய ஜெய
நெறிதந் தருள்புரி நிமலா ஜெய ஜெய
ஓமெனு மறையாய் ஒளிர்வோய் ஜெய ஜெய
காமமொடறுபகை களைவோய் ஜெய ஜெய

ஐம்பொறி வேகம் அவித்தோய் ஜெய ஜெய
அம்புவி முழுதர சாள்வோய் ஜெய ஜெய
குன்றலிலா அருட் குணமே ஜெய ஜெய
பொன்றலிலாப் பெரும் புகழே ஜெய ஜெய

கதிரவனே எழு கதிரே ஜெய ஜெய
மதியொளியே தரு மகிழ்வே ஜெய ஜெய
பதிதொறும் இனிதுசெல் பதியே ஜெய ஜெய
அதிசய நெறி யொன் றருள்வோய் ஜெய ஜெய
விண்ணே ஒலியின் விளிம்பே ஜெய ஜெய
மண்ணே மண்ணமை வளமே ஜெய ஜெய
கண்ணே கண்ணிறை கவினே ஜெய ஜெய
பண்ணே சந்தப் பாவே ஜெய ஜெய
மனமெனும் மலரமை மணமே ஜெய ஜெய
தினமடி தொழுபவர் திருவே ஜெய ஜெய

தாழ்வனைத்தும் தவிர் தயவே ஜெய ஜெய
வாழ்வனைத்தும் தரும் வள்ளால் ஜெய ஜெய
என்னையும் ஆட்கொளும் எம்மான் ஜெய ஜெய
சென்னியிற் சேவடி சேர்ப்பாய் ஜெய ஜெய
மாந்தருள் மணியென வந்தோய் ஜெய ஜெய
போந்தெனை யாண்டருள் புனிதா ஜெய ஜெய
காந்தம் போலெனைக் கவர்வோய் ஜெய ஜெய
சாந்தம் தரவரு சதுரா ஜெய ஜெய
அந்தியும் சந்தியும் ஆனவ ஜெய ஜெய
புந்தியை உந்தருட் புலவா ஜெய ஜெய

திருநீற்றாற் பிணி தீர்ப்பாய் ஜெய ஜெய
அருள்நூற் பொருள்நவில் ஆப்தா ஜெய ஜெய
தண்ணீ ராடவை தக்கோய் ஜெய ஜெய
உண்ணீர் மையிலமை உறவே ஜெய ஜெய
தீர்த்தம் தருமுயர் தீர்த்தா ஜெய ஜெய
ஈர்த்தன் பரையாள் இறைவா ஜெய ஜெய

தீராப் பிணிபல தீர்ப்போய் ஜெய ஜெய
ஆராத் திருவமு தருள்வோய் ஜெய ஜெய
ஆதியொ டந்த மில் அழகே ஜெய ஜெய
ஜோதியெனப் பொலி சுடரே ஜெய ஜெய

மன்னிய பேரருள் மலையே ஜெய ஜெய
உன்னிய நல்கரு ணூற்றே ஜெய ஜெய
எங்கணு மோங்கரு ளிசையே ஜெய ஜெய
வங்கமெனக்கடல் வருவோய் ஜெய ஜெய
அரைசே ஜெய ஜெய அமுதே ஜெய ஜெய
கரை சேர்த்திடும் அருட் கழலோய் ஜெய ஜெய
தீயதெலாம் சுடு தீயே ஜெய ஜெய
ஆய நலம் தரும் ஆவே ஜெய ஜெய
கவின் நிறை கற்பகக் காவே ஜெய ஜெய
புவி முழு துயமலர் பூவே ஜெய ஜெய

உலகெல் லாம்திருத் தொருவா ஜெய ஜெய
மலகஞ் சுகம் தவிர் மகிபா ஜெய ஜெய
அன்பர் குழாம் திரட்டதிபா ஜெய ஜெய
இன்பம் உண்டாக்கிடும் இனியாய் ஜெய ஜெய
அருட்கொடி யேற்றிடும் அண்ணல் ஜெய ஜெய
இருட் குலம் ஓட்டிடும் இனனே ஜெய ஜெய
அரியதில் அரிய சொல் ஆரிய ஜெய ஜெய
பெரியரிற் பெரிய பிரானே ஜெய ஜெய
எல்லா உயிருளும் உள்ளாய் ஜெய ஜெய
எல்லாமும் செய வல்லாய் ஜெய ஜெய

கொல்லா விரதம் கூறினை ஜெய ஜெய
கல்லார்க்கும் நெறி கழறினை ஜெய ஜெய
பொதுவாய்த் திருநெறி புகல்வோய் ஜெய ஜெய
மது மாமிசமுறை மறுத்தோய் ஜெய ஜெய
பொய்கபடாதி பொடித்தோய் ஜெய ஜெய
மெய்கழ றப்புரி மேலோய் ஜெய ஜெய

மருந்தருந் தாநெறி வகுத்தோய் ஜெய ஜெய
திருந்து மனந்தனில் திகழ்வோய் ஜெய ஜெய
துன்ப மெலாம்தவிர் தூயா ஜெய ஜெய
அன்பொளி யென்னுள் அமைப்போய் ஜெய ஜெய

என்பிழை யாவு மன்னிப்பாய் ஜெய ஜெய
இன்ப மெலாமெனக் கீவாய் ஜெய ஜெய
நுணுக்க மெலாமும் நுவல்வாய் ஜெய ஜெய
அணுக்கத் தொண்டெனக் கருள்வாய் ஜெய ஜெய
துறவுள மீந்துள் தோய்வாய் ஜெய ஜெய
பிறவிப் பயனருள் பெரியாய் ஜெய ஜெய
ஜெய ஜெய என் குலதெய்வமே ஜெய ஜெய
ஜெய ஜெய என்பெருஞ் செல்வமாம் குருவே



# 4. நான்காம் திரு அகவல்

## [ குரு அருட் புகழ் ]

பூதலத்தில் தோன்றிப் பொலியும் உயிர்களெலாம்
தீதகன்று நன்றே திருந்திப்பே ரின்பமுற
இன்பத் தமிழ் நாட்டில் எம்தாயும் இறைவனுமாய்
பொன்பெற்ற பீடத் திருந்து புவியாண்ட
பாண்டிய நன் னாட்டில் பழமறைகள் வேயுருவாய்
ஈண்டிய வெண்முத்தாய் இறையொளியைக் காட்டியருள்
நெல்லை மாவட்டத்தில் நீள்புவி முன் செய்தவத்தால்
எல்லையில் சீர்சால் இருடியர் பட்டியென
நாகலா புரத்தை யடுத்து நல்லோர் வதியும்
ஔகசால் ஊரில் உயர்சைவ நன்மரபில்

வீரபத்திரர் செய் விழுத்தவப் பேருமெனவும்
ஆரணங்கா வுடையம்மை ஆற்றுதவப் பேறெனவும்
அருளுருவாய் அம்புவிமீ தவதரித்த ஆரியனே
மருளுடைய எங்கள் மனம் திருத்த வந்தவனே
சுப்பிர மணியம்எனச் சொல்லும் பெயரோனே
ஒப்பில் அருட்குழவி யென்ன ஒளிர்ந்தோனே
ஓதா தனைத்தும் உணர்ந்தாங் குயர்ந்தோனே
சூதான தேதும் தொடற்கரிய தூயோனே
உள்ளத்தை யன்பா லுழுதங் குயரருளாம்
வெள்ளத்தைப் பாய்ச்சிப் பேரின்பம் விளைப்பவனே

அருள் வாணிபம் செய் தவனிதுயர் தீர்ப்பவனே
தெருளார் மதுரைத் திருநகருட் சென்றவனே
உடையோன் கணக்கை உணர்ந்தே உவந்தவனே
கடையொன்று னாற்றுக் கணக்கை வரைந்தவனே
அதிகாலை வைகைநீ ராடி மகிழ்ந்தவனே
பதிஞான மெய்திப் பரமாய்த் திகழ்ந்தவனே

பரிபூரணனும் பதியுருவைக் கண்டவனே
விரிவார்மெ யன்பால் விரைந்தங் கணைந்தவனே
நம்பித் தொழுதால் நலம் விளையச் செய்பவனே
வெம்பற் றொழித்தே வியன் நிட்டை யேற்றவனே

குற்றாலக் குன்றின் குகையுள் ளமர்ந்தவனே
மற்றாரும் காணா மன அமைதி பெற்றவனே
பேரின்ப வெள்ளப் பெருக்குள் ளமிழ்ந்தவனே
பாரெங்கும் இன்பம் பரப்பிக் களித்தவனே
சகல மதசமயச் சாரம் ஒரு சட்டமென
அகில உலகுக்கும் பொதுவாய் அளித்தவனே
தெய்வம் ஒன்றே யென்னத் திட்டமுறச் சொன்னோனே
சைவ உணவொன்றே தக்க உண வென்றோனே
அதிகாலையில் தண் ணீராடலுயர் வென்றோனே
துதிசெய்தொருகோயில் சுற்றுதல் நன் றென்றோனே

பண்ணீர்மை யாற்பாடும் பக்தர்க் கருள்வோனே
தண்ணீர் முழுக்காட்டிச் சார்பிணிகள் தீர்ப்போனே
நீறுபிணி நீக்கும் நிட்டையையும் கூட்டுவிக்கும்
வேறு மருந்தெதுவும் வேண்டற்க என்றோனே
கொலைகளவு பொய்சூது குடிநீக்கி யாள்வோனே
அலையும் மனத்தை அடக்க அருள்வோனே
வெறிகொள் சினம் காமம் வெந் தொழியச் செய்வோனே
நெறிபற்றின் இன்ப நிறைவை யருள்வோனே
பாலே அதனுள் படரும் நறுஞ் சுவையே
நூலே அதுகூறும் நுட்பப் பொருள் முடிவே

பூவே பொலியழகே பொற்பார் நறுமணமே
பாவே இசையேழின் பயனே பயன் விளைவே
வானே முகிலே மழையே தணீர் வளமே
தேனே இனிப்பே தெவிட்டாத தெள்ளமுதே
பொருளே பொருட்பயனே புண்ணியத்தின் பண்ணியமே
அருள்நூல் விரிவே அருட் பள்ளி ஆசானே

மந்திரமே தந்திரமே மாருத யந்திரமே
சுந்தரமே அந்தரமே சுகமே சுதந்திரமே
உலகில் உயிர்கட் கொளி வழங்கி உய்விப்பான் 2
உலகத் தவர்போல் உதித்த ஒளிக்கதிரே

ஊனாய் உயிராய் உயிர்க்குயிராய் உள்ளோனே
கோனாய்க் குடியாய்ச் செங் கோலாய் மிளிர்வோனே
ஒருவரும் காணா உயர் நிலையில் உள்ளோனே
திருவருட் செங்கோல் செலுத்தியருள் தேசிகனே
நாதமுடி திகழும் ஞானச்சிங் காதனனே
பாத கமலப் பரிசருளும் பண்ணவனே
அருள்ஞான நிட்டை அமர்ந்துய்யச் செய்வோனே
பொருள்ஞானம் உள்ளே புகட்டும் புராதனனே
சால அருட்பசிகொள் தக்கோரை யாண்டவனே
ஞால முழுமைக்கும் நன்னெறியொன் றீந்தவனே

காலமும் கற்பனையும் கண்டறியாக் காரணனே
மூலமும் நடுவும் முடிவுமிலா முன்னோனே
உருவாய் அருவாய் உருவருவாய் உள்ளோனே
கருவாய் உயிராய்க் கரணமெலாம் ஆனோனே
சீரார் கலைபலவாய்ச் செல்வமெலாம் ஆனோனே
தீராப் பிணிபலவும் தீர்த்தருளும் தேசிகனே
நீரா யுருகடியார் நேயனெனும் தூயோனே
வாராய் என எனையும் வலிய அழைத் தாள்வோனே
ஆரா வமுதாய் மெய் யன்பருளத் துள்ளோனே
ஓராதார் உள்ளத் தொளித் திருக்கும் உத்தமனே

பாராதி யைம்பூதம் பருதி மதி யான்மாவாய்
காராணவத்தைக் களைகுருவாய் உள்ளோனே
அன்புக் கடலே அருளைப் பொழிமுகிலே
இன்பப் பெருக்கே எழிலார் பொறை மலையே
ஞான வரம்பே நவிலற் கருஞ்சீரே

---

2 உய்விப்பான் = உய்வித்தற்காக

மோனப் பெருநிலையே முத்தருள்த் தூறமுதே
ஆதி நடுமுடிவாம் ஆன்மபரி பூரணனே
ஜோதி மயமாய்த் துலங்கும் பராபரனே
ஒன்றாய்ப் பலவாய் உலகமெலாம் ஆனோனே
நன்றாகித் தீதாய் நரைதிரைநோய் மூப்பிலதாய்

நனவாய்க் கனவாய் உறக்கமாய் நல்லோர் சொல்
மனம்வாக் கறியா வளமார் துரியமுமாய்
துரிய அதீதச் சுடராய்ப் பொலிவோனே
அரிய அனைத்தும் அடியார்க் கருள்வோனே
வேதமோ டாகமத்தின் விரிவாய் விளக்கமுமாய்
போத முடிவாய்ப் பொலியும் புராதனனே
ஆசா நிகளம் துகள்செய் யருட் பொறியே
பாசா டவியைப் பறிக்கும் பருமழுவே
மோனமெனும் வானில் முளைக்கும் முழுமதியே
நானறியா உள்ளத் தொளிசெய் நவமணியே

எண்ணம் மொழி செய்கை யெல்லாமும் ஆனோனே
வண்ணம் பலவும் விரித்தொடுக்கும் மாண்பினனே
சத்தியமே சத்துவமே சாந்தப் பெருநிலையே
நித்தியமே நிர்க்குணமே நேர்மை யெனும் வடிவே
சத்தேசச் சித்தே சதானந்த மாம் பரமே
வித்தேயில் லாமல் விளைவிக்கும் விஞ்சையனே
கல்லைப் பிசைந்து கனியாக்க வல்லோனே
எல்லைக் கடங்காமல் எங்கும் விரிபொருளே
களங்கம் அணுவளவும் காணவொணாச் செம்பொருளே
விளங்கும் ஒளியே விளக்கம் செயும் சுடரே

பத்தியங்கள் காட்டிப் பக்குவம் செய் விப்பவனே
பத்தியொடு ஞானம் பரிந்தளிக்கும் பார்த்திபனே
பிறப்பிறப்பை வெல்லும் பெருநெறி யொன் றீந்தவனே
சிறப்பனைத்தும் ஒன்றாய்ச் செறிந்த அருள் தேசிகனே
வருந்து பவர்தம் வருத்தம் தவிர்ப்பவனே
திருந்து மளவும் தெளிவருளும் சின்மயனே

துள்ளும் மனமடக்கித் தூய்மை நிறை விப்பவனே
கள்ளம் கபடமிலாக் கருணைபாலிப்பவனே
திருநீறு பைந்துளவம் சேர்தீர்த்த மீவோனே
குருநாத! என்போர் குறைகளெலாம் தீர்ப்போனே 120

அடியார் விருப்பம் அனைத்தும் நிறை வேற்றிறையே
அடியார் குழாம் பெருக்கி யானந்தித் தாள்பவனே
அடியார்தம் கைப்பற்றி அழைத்துச் செல் கின்றவனே
அடியாரைக் கைத்தலத் தேற்றாதரிக்கும் அற்புதனே
அடியாரைக் காக்கும் அருட்செயல் செய் கின்றோனே
அடியார் குழாத்துள் அடியனையும் சேர்த்தவனே
அடியார் இயல் படியேற் கருள விழைபவனே
கடியார் நின் செங்கமலக் கழல்வாழி வாழியவே 128



# 5. குருபரம் பொருள்

[ அக்ஷர மணி மாலை ]

அருளெனும் ஒளியே அருமறைப் பொருளே
குரு நிலை யுணர்த்தும் குருபரம் பொருளே
ஆதர வனைத்தும் ஆகியென் உளத்தே
கோதகன் றருளிரும் குருபரம் பொருளே
இறையொளி எங்கும் இலகுதல் காட்டிக்
குறைவற விளங்கும் குருபரம் பொருளே
ஈயென இரப்போர்க் கிரங்குநன் மனமே
கோயி லெனக்கொள் குருபரம் பொருளே
உளமலர் மலர்த்தும் உதய சூரியனாய்க்
3 குளநடு விளங்கும் குருபரம் பொருளே
ஊக்கமார் அடியார் உளமலர் அனைத்தும்
நோக்கும் நன்னூலாம் குருபரம் பொருளே

---

3 குளம் = நெற்றி

எழுமையில் அடியேன் இயற்றிய வினைகள்
குழுமியுள் ளனகொய் குருபரம் பொருளே
ஏமனு ருலகுக் கெய்திடல் தவிர்க்கும்
கோமக னெனச்சூழ் குருபரம் பொருளே
ஐயமோ ரணுவும் அணுகிடா வண்ணம்
கொய்யும் ஆசானும் குருபரம் பொருளே
ஒன்றுமெய்ப் பொருளென் றுணர்த்தியொண் கருணைக்
குன்றென விளங்கும் குருபரம் பொருளே

ஓமெனும் பொருளே உயர்ந்ததென் றருளும்
4 கோமள மிகுத்த குருபரம் பொருளே
ஔவையார்க் கருள்செய் அண்ணல் பேரருளைக்
5 குவ்வையாய் வழங்கும் குருபரம் பொருளே
அஃகலில் லாப் பேரருள் தரற் ககமாம்
குகையினுட் பொலியும் குருபரம் பொருளே
கண்டதும் கவரும் காந்தமாய்க் கருணை
கொண்டெனைக் கவரும் குருபரம் பொருளே
6 காசகல் நெறியைக் கருணையோ டருளிக்
7 கோசமைந் தினுளார் குருபரம் பொருளே

---

4 கோமளம்=சந்தோஷம், 5 குவ்வை=குவை=குவியல்
6 காசகல்=குற்றமற்ற 7 கோசம் ஐந்து=அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் எனும் பஞ்ச கோசங்கள்

கிளத்துவ தனைத்தும் கேடில்நன் மறையாய்க்
கொளப்புரிந் துளம்வாழ் குருபரம் பொருளே
கீழ்நெறி நாடிக் கெடுவது தவிர்த்துக்
8 கூழுடை வழங்கும் குருபரம் பொருளே
குறிக்கோ ளிலாத கொடியனென் றனக்கும்
குறிக்கோ ளுணர்த்தும் குருபரம் பொருளே
கூடுத லுணர்த்தி யூடுதல் தவிர்த்துட்
கோடுத லிலாநற் குருபரம் பொருளே
கெடுமதி விலக்கிக் கிளர்சுகம் நிரப்பிக்
கொடுமைகள் தவிர்க்கும் குருபரம் பொருளே
கேள்வியாய் அறிவாய்க் கேண்மையாய் ஒன்பான்
கோள்வினை தவிர்க்கும் குருபரம் பொருளே
கையறவி லாவுட் கண்திறந் திருளைக்
கொய்யுமெய் யறிவாம் குருபரம் பொருளே
கொழு ஒரு கொடியைக் கொளல்போல் எனைக் கொள்
கொழுநன் என்றிலகும் குருபரம் பொருளே
கோருதல் அனைத்தும் கொடுத்து வேறெதையும்
கோருதல் தவிர்க்கும் குருபரம் பொருளே
கௌவியின் னுயிரைக் கலக்குமோ ராறின் 9
குவ்வையை எரிக்கும் குருபரம் பொருளே

---

8 ஓராறின் குவ்வை=காமாதி அறுபகையின் கூட்டம்
9 கூழ்=உணவு

சத்துசச் சித்தாய்ச் சச்சிதா னந்தக்
கொத்தென விளங்கும் குருபரம் பொருளே
சாத்திர மனைத்தின் சாரமாய் ஞான
கோத்திரம் விளக்கும் குருபரம் பொருளே
சிக்கலனைத்தும் தீர்ந்திட வொலிக்கும்
10 குக்குடமெனச்சூழ் குருபரம் பொருளே
சீரிய உண்மை திகழ்ந்திடப் பொய்கொய்
கூரிய வாளாம் குருபரம் பொருளே
சுற்றமாய்த் துணையாய்ச் சூழ்ந்து யான் புரியும்
குற்றம் பொறுக்கும் குருபரம் பொருளே

சூத்திரம் காட்டித் துரிய மெய்ஞ் ஞானக்
கூத்தினை யுணர்த்தும் குருபரம் பொருளே
செஞ்சரண் சிரமேற் சூட்டு மெய்ஞ்ஞான
குஞ்சரம் நிகர்க்கும் குருபரம் பொருளே
சேட்டைக ளனைத்தும் சிதைத்து மெய்யின்பக்
கோட்டையாய் இலகும் குருபரம் பொருளே
சைனியம் சூழச் சாருமா ணவத்தைக்
கொய் நியமம் கொள் குருபரம் பொருளே
சொத்தென ஞானச் சுகத்தினைக் காட்டிக்
11 குத்திரம் தவிர்க்கும் குருபரம் பொருளே

10 குத்திரம்=வஞ்சகம் 11 குக்குடம்=கோழி (சேவல்

12 சோபித மிகுந்த துரிய நாடருளக்
சோபிஎன் றணையாள் குருபரம் பொருளே
13 சௌமியம் நாடிச் சாரு மெய்யடியார்
14 குவ்வொடு ழுவைச் சேர் குருபரம் பொருளே
தடையற எவர்க்கும் சட்டமென் றொரு நற்
கொடையினை வழங்கும் குருபரம் பொருளே
தாயெனக் காத்தெம் தந்தையாய் இதயக்
கோயிலுள் விளங்கும் குருபரம் பொருளே
15 திலமதில் நெய்போல் தெய்வமெங் கெங்கும்
குலவுதல் உணர்த்தும் குருபரம் பொருளே

தீட்டிய அறிவிற் சிறந்த மெய் யின்பம்
கூட்டியுள் ளொளிரும் குருபரம் பொருளே
துறையெலாம் ஒன்றும் தூநெறி வழங்கிக்
குறையெலாம் தீர்க்கும் குருபரம் பொருளே
தூல சூக்குமமும் தூயகாரணமாம்
கோலமும் எனச்சூழ் குருபரம் பொருளே
தெண்டிரை நிகர்க்கும் தெய்வநல் லருள் பெய்
கொண்டலை நிகர்க்கும் குருபரம் பொருளே
தேவை தீர்ந் துண்மைச் சேவைநாட்டியார்
கோவையைக் காணும் குருபரம் பொருளே

---

12 சோபிதம்=அழகொளி, 13 சௌமியம்=சாந்தம்,
14 குவ்வொடுழு=குழு, 15 திலம்=எள்

தைல நே ரன்பெனும் தாரைதந் தாசை
கொய்யுமா ரியனெனும் குருபரம் பொருளே
தொழிற்றுறைத் திருவும் தூய பேரின்பும்
கொழித்திடத் தோன்றும் குருபரம் பொருளே
தோடமெல் லாம் தவிர் தூய ஜோதியையுட்
கூட நல் வழியருள் குருபரம் பொருளே
16 தௌவுதல் தவிர்த்துட் சார்ந்திடப் புரியும்
17 குவ்வொரேழெனவாம் குருபரம் பொருளே
நட்பனைத் தினு மெய்ந் நட்பென உளத்திற்
கொட்புற விளங்கும் குருபரம் பொருளே

நானில வளமும் நனிவளர்த் தோம்பும்
கோனென விளங்கும் குருபரம் பொருளே
நிட்டை யென் றொரு செயல் நிகழவைத் துண்மை
கொட்டிக் குவிக்கும் குருபரம் பொருளே
நீதிநன் னேர்மை நேமமாதி யருள்
கோதில் மன்னவனும் குருபரம் பொருளே
நுகரொணு இன்பம் நுகரவைத் தாளும்
குகர ருகரமாம் குருபரம் பொருளே
நூலெலாம் கூறு நுண்மை காட்டிடு செங்
கோலென விளங்கும் குருபரம் பொருளே

---

16 தௌவுதல்=கெடுதல், 17 கு=பூமி, (ஞானபூமி=7)

நெறியெலாம் கண்டருள் நெறியளித் துண்மைக்
  குறியினைக் காட்டு சற்குருபரம் பொருளே
நேர்த்திசா லன்பருள் நீசனும் எனையும்
  கோத்திட விழைந்திடும் குருபரம் பொருளே
நைட்டிகர் போற்றுமெய்ஞ் ஞானவைங் கரன்முன்
  குட்டியுய் யச்செயும் குருபரம் பொருளே
நொடியினுள் ளடியர்தம் நோய் தவிர்த் தவருள்
  குடிபுகுந் தினிதுறை குருபரம் பொருளே
நோக்கினால் நினைவினால் நோன் மைசால் கையால்
  கோக்குமூ வினைதவிர் குருபரம் பொருளே

18 நௌவெனப் பத்தர்பால் நண்ணிக் கரைசேர்
  குவ்வுநல் ருவ்வுமாம் குருபரம் பொருளே
படியின் மெய்ப்பரிவெலாம் படிவ மாயதுபோல்
  கொடிய னென்றனையுமாள் குருபரம் பொருளே
பாசிசேர் குளநிகர் பாழ்மனத் தெனையும்
  கூசிடா தாண்டருள் குருபரம் பொருளே
பிழைபல பொறுத்தெனைப் பேணியென் னுளமும்
  குழைவுறச் செய்தருள் குருபரம் பொருளே
பீடுசால் அன்பையுட் பெருக வைத்தறிவாம்
  19 கோடு கண்டிடவருள் குருபரம் பொருளே

---

18 நௌ=தோணி, 19 கோடு=சிகரம்.

புலனெலாம் மாய்த்தருட் பொருளினு லடியார்
குலமெலாம் காத்தருள் குருபரம் பொருளே
பூணுக வென்றுளே பூட்டி மெய் யன்பைக்
கோணுத லின்றியாள் குருபரம் பொருளே
பெட்பினை யுணர்த்தியென் பேதைமை நீக்கிக்
கொட்புற விளங்கிடும் குருபரம் பொருளே
பேறனைத்தும் தரும் பெருநெறி கொடுத்துள்
கூறரு மறைநவில் குருபரம் பொருளே
பைத்தியம் எனத்திரி பாவியென் வினையாம்
கொத்தினையரிந்தருள் குருபரம் பொருளே
பொறிபுலன் களினுட் புகுந்து பேரருளாம்
குறியினை யுணர்த்தும் குருபரம் பொருளே
போதெலாம் வீணிற் போக்கிடா வண்ணம்
கோதெலாம் நீக்கும் குருபரம் பொருளே
பௌவ மத்தனையும் பருகியுட் கொள்ளும்
20 குவ்வையார் டம்மெனும் குருபரம் பொருளே
மதி மண்டலத்த முதருந்தி நல்வாசிக்
குதிரையை யடக்கியாள் குருபரம் பொருளே
மாணவை காட்டியுள் மாநடம் காட்டிக்
கோணலை நிமிர்த்தியாள் குருபரம் பொருளே

---

20 குவ்வையார்டம்=குடம்

மிகுதவ மியற்றிட விளங்குதென் பொதிகைக்
குகையிற் றனித்துறை குருபரம் பொருளே
மீட்டுமிப் பிறவியுள் விழச் செயா தின்பக்
கூட்டினைத் தந்தருள் குருபரம் பொருளே
முடிவுகாட் டித்தவம் மூட்டியுள் நின்பொற்
கொடியிணை நிறுவுமென் குருபரம் பொருளே
மூடிய தொல்வினை முடிச்சவிழ்த் தருள்செய்
கோடிஞா யிறுநிகர் குருபரம் பொருளே
மெள்ள நன்னெறியை விளக்கிவைத் தெமையாட்
கொள்ளவே வந்தருள் குருபரம் பொருளே

மேல்நிலை யனைத்தும் விளக்கியோ ரிறைசெங்
கோல்நிலை யுணர்த்திடும் குருபரம் பொருளே
மையல்தீர்த் தருளொளி வளர்த்து மும்மலமும்
கொய்யவே வந்தருள் குருபரம் பொருளே
மொழிமனம் செயலிலா மோனமெய் யின்பம்
கொழியருள் நிலைதரும் குருபரம் பொருளே
மோக மெல்லாம் தவிர்முத்தி நன்னெறிசொல்
21 கோகன தப்பதக் குருபரம் பொருளே
மௌன மந்திரமருள் வள்ளலென் றிந்தக்
22 குவ்வல யம்புகழ் குருபரம் பொருளே

21 கோகனதம்=தாமரை, 22 குவ்வலயம்=குவலயம்=பூமி

யதிகள்கண் டறிகிலா இன்னெறி யளித்துட
குதிகொளும் தலைவனும் குருபரம் பொருளே
ரதிமதன் விடுமைந் தெனுமலர்க் கணையால்
கோதிமனத் துயர்கொலும் குருபரம் பொருளே
லங்கணம் மவுனம் என்றிவை கொடுத்துள்ளக்
கொங்கலர் ஆலர்த்திடும் குருபரம் பொருளே
வந்ததொப்புக் கொள் நல் வாழ்வுசெய் யென்றுட்
கொந்தளிப் பைத்தவிர் குருபரம் பொருளே
வானநல் வாழ்வினை வையமேல் தந்தாள்
கோனென விளங்கிடும் குருபரம் பொருளே

வித்தினை வறுத்தருள் விளைத்து வெம்பவமாம்
கொத்தழியச் செயும் குருபரம் பொருளே
வீட்டுநன் னெறியினை விளக்கி மெய்யன்புக்
கூட்டினுட் குடிபுகும் குருபரம் பொருளே
வெளியிலுள் ளொளிநிறை விடியலில் நீரிற்
குளியெனக் கூறிடும் குருபரம் பொருளே
வேக மெலாம் தவிர்விழுமி யோருளமாம்
23 கோகனதத்தமர் குருபரம் பொருளே
வைபவர் தமக்கும் நல்வாழ்வு தந்தவலம்
கொய்யு நல்வேந்தெனும் குருபரம் பொருளே

23 கோகனதம்=தாமரை

வெளவியெ னுளம்கொளும் வள்ளலே இன்பக்
குவ்வையை வழங்கியாள் குருபரம் பொருளே
அழகிய தமிழ்ப் பாட்டருளி னுற்பாடும்
குழலேநேர் குரல்கொள்எம் குருபரம் பொருளே
அளவிலார் தமைப்பே ரருள்மயமெனச் செய்
குளவிபோல் திகழும். எம் குருபரம் பொருளே
அறம் பொருளின்பம் அனைத்தையும் விளக்கும்
குறமகள் பாடல்சொல் குருபரம் பொருளே
அனத்தை யொத்தன் போடருள் பெறச் செய்தே
குனட்டைகள் தவிர்த்தருள் குருபரம் பொருளே 100

---

# 6. அருள்மோன குருமாலை

## பதினான்கு சீர்க்கழி நெடில் ஆசிரிய விருத்தப் பதிகம்

### [ அதிசயம் ]

உலகின்மிசை அதிசயம் பற்பல இருப்பதாய்
    உலகினர் உரைத்திடுவரால்,
உடலமைப்பதிசயம், உடலினிடை உயிர்நின்
    றுலாவுவது மிக அதிசயம்,
நிலமிசை யெவ் விதமான அதிசயமும் இதனுக்கு
    நிகரில்லை யென்று புகல
நிமிடத்தி லெண்ணற்ற பலகோடி வகையான
    நினைவுகொளு மனமதி சயம்,
புலனைந்தி னூடுமுறு பொறியைந்தி னூடுமது
    புகுகின்ற தினுமதி சயம்,
புனிதம் விழை கையிலுமது பழையதாம் புன்மையிற்
    போதல் மிக மிக அதிசயம்,
கலமென நெடும்பவக் கடலினடு விற்றேன்று
    கருணை நிறை ஞான குருவே
காமமுதலாம்களை களைந்தருட் பயிர் விளைவு
    காட்டியருள் மோனகுருவே 1

[ உயர்வு ]

காவியமும் ஓவியமும் இன்னமும் காணரிய
கருணையே வடிவமாகிக்
காசினியில் நீயவதரித்த துயர்வாம், அதிற்
கட்டு திட் டங்களினிதே
யேவிடும் சட்டநெறியைப் பல்லுயிர்க்கும் அருள்
மேன்மை யுயர்வாம், அதனினும்
வெறியனேன் பாலும்மெய்க் கருணை வைத்தந் நெறி
விளக்கி யாள்கின்ற துயர்வாம்,
பாவியலொடன் பொரணு காட்டிப் புரக்கின்ற
பரிவீது மிகவு முயர்வாம்,
பாவநினை வடியோடு நீக்கி நின்னடியெய்து
பண்பருளின் இன்னு முயர்வாம் ;
மாவிரத முயர் நிட்டையனு பூதியாதிய
மகிழ்ந்துதவு ஞான குருவே
மனமென்னு மலரின் மிசை தினமன்னியருளாடல்
வளமின்னு நிறை செய்குருவே 2

[ நன்று ]

அவனிமிசை நீ மனிதனுகி வந்ததுநன்
றருட்பரத நாட்டினிடையே
அவதரித்தது நன்று, தமிழகத்திற் போந்த
ததினுமிக நன்று, மணமும்
உவகையொடு தமிழகத்திற் கொண்டதினும் நன்றோர்
ஓங்கார மூர்த்தி வடிவை
உயர்மதுரை யிற்கண்டு தவஉணர்வு கூடியங்
கோம்பிட்ட தின்னும் நன்றும்,
தவநிறைவையும் பொதிகையிற் பெற்றதினும் நன்று
தரணி வாழுயிர்கட் கெலாம்
சட்டநெறியைத் தந்து பேணல் நன்றெனையும்
தடுத்தாண்ட கருணை நன்றே

தவறுபல யான் செயாவகை தடுத்தாண்டருள்
தயாள மிகமிக நன்று காண்
தழை வளஞ்செறியுமிரு டிப்பட்டி வள்ளலே
சாந்த சத்குரு மூர்த்தியே 3

## [ தயை புரிய வேண்டும் ]

எங்கெங்கு யான்செலினும் எம்மொழிகள் பேசினும்
எத்தொழிலினைப் புரியினும்
எந்நினைவை எண்ணிடினும் எவரோடு பழகிடினும்
என்குரு நின் அன் புருவமே
தங்கிஎன் சிந்தையிற் சாந்திதரு மாறுநீ
தயைபுரிய வேண்டும் அரசே
சதுர்மறையும் ஆகமமும் ஏனைநூல் பலவும்நனி
சாற்றவரி தான நெறியை
இங்கெவரும் எளிதுபற் றிப்பயனெலாமடைய
இனிதருளும் ஒரு குரவனே
இருடியர்ப் பட்டியினில் வேளாளர் திருமரபில்
எம்முனோர் செய்தவத்தால்
பொங்கெழிலுடன் போந்த புண்ணியக் குழவியே
புகலரிய தவ வடிவமே
போதாந்த நாதாந்த வெளியின் கணருளோடு
பொலிகின்ற புனித குருவே 4

## [ வேண்டும் ]

உண்மையன் போடுனது திருவடியை நாள்தோறும்
உன்னியுயும் உள்ளம் வேண்டும்
ஒப்புயர்விலா நினது திருவடிப் பெருமையே
ஓதியுயும் வாக்கு வேண்டும்
திண்மையுற நின்திருக் கோயிலை யமைக்கும்
திருப்பணி செய்தேகம் வேண்டும்
திருவடியையே நம்பி வாழுமெய் யடியார்
திருத்தொண்டு நாளும் வேண்டும்

வன்மைமிகு நினது திருநாமம் நாள்தோறுமென்
மனதில் மாற்றேற்ற வேண்டும்
மனமுதற் கருவிகளெ லாமொடுங் கருள்நிட்டை
வளமெற்கு வாய்த்தல் வேண்டும்
பெண்மைமிகு கற்பரசிபோல் தலைவனும் நினருள்
பேணிச் சுகித்தல் வேண்டும்
பெரியர்பலர் புகழிருடியர்ப்பட்டி யிற்போந்த
பெருமைமிகு குருநாதனே 5

## [ வருக ! ]

பற்றனைத்தும் விட்டு முற்றும் துறந்திலகு
பாவனர்கள் தலைவ வருக !
பரமயோகிய ரெலாம்காணு வொர் நெறிகண்டு
பார்க்கருளும் முனிவவருக !
நற்றவப் பயனெலாம் எளிதுபெற வல்லநெறி
நவிலுமெம் துணைவ வருக !
ஞாலத்தி னிற்சட்ட நெறிபேணு மன்பரிடை
நட்பூட்டு நம்பிவருக !
அற்றவர்களுக்களவில் நிதி கிடைத்தாங்கெழு
ளமைந்தோம்பு செல்வ வருக !
அனவரதமும் பிரிவொரணுவளவு மின்றிநின்
ருண்டருளுமரச வருக !
கற்றவர்கள் குழுவெலாம் கைகூப்புமாறருட்
காட்சிதரு மண்ணல் வருக !
கடையனேற்கும்தி ருவருட்ப்ரஸாதம் தந்து
காத்தருள்க குருநாதனே 6

## [ தருக ]

குன்றைநிகர் நற்பொறுமை தருகநினை நாடன்பர்
கூட்டமேதருக, மேலாம்
கொள்கையெல்லாம் தருக, குற்றமொன்றும் செயாக்
குணமுடைய மனது தருக,

நன்றையென்றும் நாடு நாட்டமே தருக, பிறா
நலிநீக்கு தொண்டு தருக,
நாயகநின் ஒண்கோயிலின்பணி நிறைவேற்ற
நற்பொருளொ டாற்றல் தருக,
வென்றைம் புலன்களையும் மெய்யுணரும் நல்லுளம்
விரைவில் நீ தருக, மலர்தூய்;
விழுமியர்கள் தொழுதேத்து நினது தாள் மலர்தருக
மெய்யின்ப வாழ்வு தருக,
ஒன்றைநன் றேபற்றி யுய்கென அருட் சட்டம்
உலகுக் களித்த உறவே
ஒப்பற்ற பேரொளியொ டிருடியர்ப் பட்டியில்
உறைந்தருளும் ஞான குருவே 7

[ அருள்க ]

ஓமக்கரப் பொருள்என் உள்ளத்தில் எப்போதும்
ஒளிருமா றருள்க, நின்றன்
ஒப்பற்ற திருவருட் சட்டநெறி பிசகாமல்
ஓம்பியுயு மாறருள்க, நின்
நாமத்தையன் போடு போற்றியடியார் கூட்டம்
நண்ணி வழிபட அருள்க, என்
நயனம் வாய்கால்கைகள் நாசிசெவி யாவுநின்
நற்பணிக் காக்கி யருள்க,
காமத்துடன் கோபமோக மதலோபம்
களைந்து சாத்வீகம் அருள்க,
கரணங்களிற் றேய்ந்த தீமை தீய்த்தேயருட்
கரணங்களீந்தருள்க, நன்
நேமத்துடன் திருக்கோயில் திருப்பணியை
நிறைவேற்றும் ஆற்றலருள்க,
நிறை செல்வ மீந்தருள்க, இருடியர்ப் பட்டியமர்
நேயனே குருநாதனே 8

## [ வாழ்க ]

சாந்தமெனும் வடிவொடு விளங்குகுரு மூர்த்திநின்
தண்ணருள் விளக்கம் வாழ்க,
தத்துவா தீதமாம் நித்தியா னந்தமருள்
சத்குரு நின்சட்டம் வாழ்க,
மாந்தர்க்கும் ஏனையுயிர் கட்கும் வெண்ணீறெனும்
மருந்தருள் நின் மாண்பு வாழ்க,
மல்குபல பிணியையும் தீர்த்தத்தி னுல்நீக்க
வல்லநின் வண்மை வாழ்க,
ஆந்தனையும் நின்னருட் சட்டநெறி யைப்பேணும்
அன்பர் அடியார்கள் வாழ்க,
அனவரதம் நினதருளை எங்கும் பரப்பும்நின
தாலயப் பொலிவு வாழ்க,
காந்தமென ஈர்த்துயிர்களைப் பக்குவம் செய்நின்
கருணைபல்லாண்டு வாழ்க,
கமலம்நிகர் நினது பதம் நீடுழிவாழ்க, மெய்க்
கடவுளாம் குருநாதனே 9

## [ வெல்க ]

அறியாமை யாம்பேரிருள் நீக்கு ஞானமாம்
ஆதவநின் ஆற்றல் வெல்க,
அன்பென்னு முழுமதியமாயிருந்தருளமு
தருத்தும் நின் கருணை வெல்க,
பொறியாவு முணரவொண்ணுத பேரின்பம்
புணர்த்தும் நின்பொறுமை வெல்க,
பூரணத்துட் பூரணப்பொலிவு மிக்கநின்
போத சுகநிறைவு வெல்க,
குறியான வொன்றினிற் குறி வைத்து வாழ்கெனக்
கூறுநின் கொள்கை வெல்க,
குற்றமில்லாத்திரு வருட்சட்ட மொன்றைக்
கொடுக்கும் நின்பெருமை வெல்க,

வெறியேன் எனைத்தடுத் தாட்கொள்ளும் நின்னருள்
விளக்கம் என்றென்றும் வெல்க,
விழுமியர்கள் தொழுமிருடியர்ப் பட்டியின்கணமர்
விமலசத் குருநாதனே 10

[ போற்றி ]

மோன முடிவைக் குறிப்பிடல் போல் விளங்கு நின்
முடிபோற்றி, நுதல் நடுவிலே
முச்சுடரில் நடுவோங்கும் அங்கியெனு மெய்ஞ்ஞான
மொய்யொளிப் பொலிவு போற்றி,
கானமுறை வேடர்நிகர் ஐம்புலக்கள் வர்பிழை
கண்டிக்கும் ஆற்றல் போற்றி,
கருணையோ டுயிர்களை யெலாமீர்த்து நல்ல நெறி
காட்டுமிணை விழிகள் போற்றி,
வானமுதை வெல்லினிய வார்த்தையால் அடியர் துயர்
மாற்றுதிருவாய் போற்றி, நல்
வண்மையொடு மெய்யடியர்தம் சிரத்தருள் புரியும்
வார்கரம் போற்றி, அருளாம்
தேன முதை யெவ்வுயிர்களுக்கு மூட்டி தயத்
திறம் போற்றி, அடியர் எய்தும்
செல்வமாம் திருவடிகள் போற்றி, இருடிப் பட்டி
திகழ்ஞான குருநாதனே 11

# 7. அருள வேண்டும் குருவே

சாவேரி ராகம் கீர்த்தனை ஆதிதாளம்

] பல்லவி ]

அருளவேண்டும் குருவே — உன்றன்
அருட்சட்ட நெறிப்படி அடியேன் ஒழுகியுய்ய (அருள)

[ அநுபல்லவி ]

மருளுடை மனத்துறும் மலினமெல்லாமகற்றி
வளமிகும் உன் பொற்பத மலரை வழுத்தியுய்யா (அருள)

] சரணம் ]

உருளும் உலகிலுறும் உயிர்கள் அனைத்தினுள்ளும்
ஒளிரும் உன் உருக் கண்டும்
உண்மையன்பே புரிந்தும்
பொருளுடன் உயரவும் போற்றிப் பொறுமையுடன்
புனித நிட்டை புரிந்தும்
பொலிவு மிகுந்தும் உய்ய (அருள)

சுத்த மனதினுடன் பத்தி செய்யும் அடியார்
சுற்றமென உகந்து மெத்த உபசரித்தும்
முத்தர்களின் பொற்பத முளரி மலர் பணிந்தும்
முழுமனதுடன் பணிவிடைகள் புரிந்தும் உய்ய (அருள)

# 8. ஆனந்த அமுதருள் நாதன்

தன்யாசி ராகம் கீர்த்தனே ஆதிதாளம்

[ பல்லவி ]

ஆனந்த அமுதருள் நாதன்— உயர்
அருட்சட்ட நெறியினை அவனிக்களித்த போதன் (ஆனந்த)

[ சரணம் ]

தானம் தவம் மிகுந்த தாரணியில் சிறந்த
தமிழகத் திருடியர் பட்டியெனும் தலத்தில்
ஞானம் தரும் சற்குரு நாதன் என உதித்து
நவிலும் மதங்கள் நிலை நாட்டுமோ ருண்மை கண்டு
பத்தியை யெங்கும் பரப்பு பகாரன்
பத்தியம் அன்பெனச் செப்பு முதாரன்
சத்தியமே மொழி கென்ற குணளன்
சத்தியனைத்தும் தரும் கருணளன் (ஆனந்த)

உழலும் மனம் திருந்த உழவு செய்யும் உழவன்
உளத்தைக் கவர்ந்து கொண்டுள் ஒளியைத் தரும் வணிகன்
பழவினைப் பகைபொடி படுத்திப் பாலிக்கும் மன்னன்
பகரரிய துரிய பதம் வழங்கும் அந்தணன்
அத்தனும் அன்னையுமா யொளிர் நேயன்
அத்தமதைச் சிரம் வைத்தருள் தூயன்
முத்தமிழிற் கவி செப்பருள் வாயன்
முத்தருளத்தொளிர் பக்த சகாயன் (ஆனந்த)

## 9. உனைப் பிரியாதிருக்க ஒரு வரம் தரல் வேண்டும்

---

கீர்த்தனை

[ பல்லவி ]

உனைப்பிரியாதிருக்க ஒருவரம் தரல் வேண்டும்
ஒப்பில் சற்குருநாதனே

[ அநுபல்லவி ]

எனைப் பிறப்பித்ததேனோ ? இவணுழல் விப்பதேனோ ?
நினைப்பு மறப்பறியா நித்ய நிலை வழங்கும் (உனைப்)

[ சரணம் ]

ஜனிப்பிருப்பு மரிப்பாம் சாகரத்துட் கிடந்து
மனப்புயல் அலைத்திட வருத்த முற்றேயுழன்று
வினைப்பொதியைச் சுமந்து வெறியனெனத் திரிந்து
தனப்புதையல் விழைந்து தவறு பல செய்யும் நான்
(உனைப்)

நினைப்பதெல்லாம் அடியார் நிதமும் பெறச் செய்கின்றாய்
நினைப்பதன் முன் விரைந்து நேரில் சென்று நிற்கின்றாய்
அனைத்துலகினும் நின் பேராட்சி செலுத்துகின்றாய்
வினைத்தொகையைப் பொடித்து விரைவில் முத்தியீந்தாள்
வாய் (உனைப்)

# 10. அருள் துணை துணிவு

[ "மற்றுப்பற்றெனக்கின்றி" என்ற பண் ]

அன்பினால் உனை ஏத்தும் வண்ணம்
அறிந்திலேன் உனை நாள்தொறும்
துன்பமே தரு தீய எண்ணமும்
சொல் செயல்களும் கொண்டுளேன்
இன்பமே தருநீ யெனக் கருள்
ஈவை யென்று துணிந்துளேன்
பொன் புகழ்மிகு ரெட்டியப்பட்டிப்
புண்யனே குருநாதனே. 1

கருணையோடும் எனக்களித்த
புலன்களால் கடையேன் நிதம்
இருள் நிறைந்த நெறியிற் சென்றனன்
ஏழையேனைப் புரந்தருள்
மருள் நிறைந்த மனத்தர் தம்மையும்
மாண்பு சாலருட் சட்டத்தால்
தெருள் நிறைந்தவ ராக்கியாண்டருள்
செய்யு மென் குருநாதனே. 2

வேளைதோறும் புசிப்பதும் கண்
விழிப்பதும் துயில் கொள்வதும்
காளைபோல் மிகு காம மெய்திக்
கடைப்படும் செயல் செய்வதும்
நாளை நிட்டையை நாடலாமென
நாளும் சோம்பித் திரிவதும்
தாளையெய்திடச் செய்யுமோதடுத்
தாள்க சற்குருநாதனே. 3

ஊனமே மிகும் ஊனுடம்பினுள்
உள்ள ஐம்புலன் கொண்டியால்
மானமே கெடக் காமம் கோபம்
மலிந்து பாழ்படலாயினேன்
ஞானமார் நெறி காட்டியே இந்த
ஞால மீதருள் மாரிபெய்
வானமே இன்ப ஜோதியே தவ
வாழ்வருள் குருநாதனே. 4

எவ்வுயிர்க்குளும் நீ யிலங்கும்
இயல்பை மேலவர் காண்பரால் ;
அவ்வுணர்வணு வேனுமின்றி
யடியனேன் கெடல் ஞாயமோ ?
அவ்வுமுவ்வு மொர் மவ்வும் காட்டி
யருட் பெருஞ் சுடர் காட்டுவாய்
வெளவும் வல்வினை யைச் சுடும் தவ
வள்ளலே குரு நாதனே. 5

ஒன்றுமே யறியாமலிங்ஙன்
உழலுவேன் கொடுங் காமத்தால்
நன்றலாத செயல்கள் செய்திந்த
ஞாலமேற் பழி பூண்டுளேன்
என்றெனுள் நின்னருட் பெருஞ் சுடர்
ஏழைகண்டுயச் செய்வையோ ?
ஒன்றருள் நெறியென்றுயிர்கட்
குணர்த்தியாள் குருநாதனே. 6

பள்ளம் நாடிச் செல் நீரைப் போலப்
பரிந்து போற்றும் மெய்யன்பர்தம்
உள்ளமேதிருக் கோயிலென்ன
உவந்தமர்ந்தருள் ஜோதியே
கள்ளமே மிகும் எண்ணம் கொண்ட
கடையனேனைப் புரந்தருள்
வெள்ளமே பெருக்கக் கருதுக
வித்தகக் குருநாதனே. 7

தீயனேனையும் அன்பினோடு
திருத்த எண்ணிடும் தெய்வமே
போய நின்ற புகும் பிழைகள்
பொசுக்கி யாளும் பொற் சோதியே
ஆய நுண் கலையாவுமாகி மெய்
யாற்றலாயழகா யொளிர்
தூயனே ரெட்டிப்பட்டியின்கண்
துலங்கும் சற்குரு நாதனே. 8

என்னுள் நின்னொளி காண எண்ணினன்
ஏழையேற்குத் துணை செய்வாய்
பொன்னும் வைரமும் தீப்பிழம்பும்
புலரச் செய்கதிர் திங்களும்
மின்னும் மீனும் எனப் பொலியும் நின்
மேனிகாட்டியருள் செய்வாய்
பன்னும் மாமறையாக மாதி
பரவும் சற்குரு நாதனே. 9

ஓய்விலாமல் அலைந்து காமத்
துழன்று பாழ்படும் நாயினேன்
மாய்விலாத நெறி புவிக்கு
வழங்கும் சற்குரு நாதநின்
தேய்விலாத மெய்த் தேசையென்னுள்
தெளிவுறக்கண் டுயச் செய்வாய்
சாய்விலாத மெய்யன்பருள்ளம்
தழைந்து வாழ்தவ ராஜனே. 10

நீதியே நிகரற்றிலங்கிடும்
நேர்மையே தவத்தூய்மையே
ஆதியே நடு அந்தமே யறி
தற்கொணு அழகின்பமே
ஜோதியேயென நீயெனுள் ளொளிர்
சூக்குமத்தை யுணர்த்துவாய்
ஓதியே யுணரற் கருந்தவ
உண்மையே குருநாதனே. 11

## 11. தவம் வேட்டல்

(பதிகம்)

[ பதினுன்கு சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம் ]

கருவி கரணங்களெல்லாம் ஒடுங்கிடன் நினது
கருணை யொளி தோன்று மென்றே
கற்ருேர் களெல்லாம் நவின்றுளார் கரணங்கள்
கடையேன் ஒடுக்க அறியேன்
துருவி நின்னருளொளியினைக் காண அறியேன்
சுடர் மிக்க நின்னொளியினைத்
துரியவெளி யின்கணே கண்டியானுய்ந்திடத்
தூய நீ யருள் நல்குவாய்
மருவு கடல் ஞாலமேல் வாழு முயிர்கட்கெலாம்
வழிகாட்ட வந்த குருவே
மாசுமிகு மேழையேன் மனமும் திருந்திட
வகை செய்ய வந்த குருவே
பருவ பக்குவமுடைய பத்தர்களையெல்லாம்
பரிந்தாள வந்த குருவே
பருதிமதி கனலாகிவிண் மீன்கள் பலவாய்ப்
படர்ந்தொளி பரப்பு சுடரே.

ஐம்பொறி புலன்களை யடக்கியுள் நோக்கினல்
அண்ணல் நின் னருளொளியினை
அறிந்து பிறவிப்பயனை யடையலாமென்று மெய்
யறிஞர் பலர் ஓதுகின்ருர்
ஐம்பொறி புலன்களை யடக்கியுள் நோக்கும் வழி
யடியனேன் அணுவுமறியேன்
ஐம்பொறி புலன்கள் கொடு காமாதிகட்குள்
ளழுந்தி யழிவெய்துகின்றேன்

ஐம்பொறி புலன்களாற்கருளினு லீந்தநீ
அவைகளை யடக்க அருள் வாய்
அருட்பெருஞ்சோதியைக் காட்டியருள் வாயின்ப
அமுதெனக் கூட்டியருள்வாய்
ஐம்பொறி புலன்களா லறியொணு மணியே
அருட்சுவை யுணர்த்தும் அமுதே
அழிவற்ற மெய்ந் நெறியுணர்த்தி யாளரசே
அருள்ஞான குருநாதனே. 2

கரணங்கள் எல்லாமும் ஒய்வுறச் செய்யின் நின்
கருணை யொளியைக் காணலாம்
கருவினுள் ளெய்தாத நிலையடைய லாமெனக்
கற்றோர்கள் நவிலுகின்ருர்
கரணங்களெல்லாமும் ஒய்வுறச் செய்யும் வழி
கடையனேன் அணுவும் அறியேன்
கரணங்களைக் கொண்டு காமாதி யெய்திக்
கலங்கியழு தேங்குகின்றேன்
கரணங்கள் யாவு நின் னருளா லொடுக்கி நின்
கருணை யொளி காட்டியருள்வாய்
கருவி னுள் ளெய்தியினி பிறவாத நிலையையும்
கடையனேற் கினிதருளுவாய்
கரணங்கள் யாவு முணர்தற்குரிய காட்சியே
கருணைநிறை யருளாட்சியே
கற்பக விருட்சமாய்க் காம தேனுவுமாய்க்
கடைக் கணருள் புரி மாட்சியே. 3

புலன்களெல்லா முள்ளொடுங்கிடச் செய்யின் நின்
பொற்சோதி கண்டுய்யலாம்
புன்பிறவி யெய்தாமல் முத்தி பெற லாமெனப்
புண்ணியரெலாம் புகன்ருர்;
புலன்களெல்லாம் உள்ளொடுங்கிடச் செய்யும்வழி
பொய்யனேன் அணுவும் அறியேன்

புலன்களைக் கொண்டு காமாதியுளழுந்திப்
புலம்பிக் கலங்குகின்றேன்
புலன்களெல்லாமெனக் கருளினுற்றந்தநீ
பொற் பொடவைகளையொடுக்கும்
புனித நெறியினை யெளிதுணர்த்தியருள்வாய் நினது
பொற்சோதி காட்டியருள்வாய்
புலன்கள் கொடுகாணரிய பூரணப் பொருளே
புகழ் பொலிவு நல்கு பொருளே
போதாந்த வெளியினிற் பொலியு மெய்ப்பொருளே
புவிக்கணுற்றெருளி செய்பொருளே. 4

வெளியினிற் சென்றலை புலன்களை யொடுக்கியுள்
விளங்கும் நின்னொளி கண்டிடின்
மேலான பரமுத்தி யெய்தலா மெனவே
விளம்பினர் பெரியரெல்லாம்
வெளியினிற் சென்றலை புலன்களை யொடுக்கும்வழி
வெறியனேன் அணுவு மறியேன்
வெளியினிற் சென்றலை புலன்கள் கொடுகாமாதி
வெறி கொண்டு பாழ்படுகிறேன்
வெளியினிற் சென்றலை புலன்களை யொடுக்கும்வழி
விமல நீ காட்டியருள்வாய்
மேலான நின்னருட் ஜோதியைக் காட்டுவாய்
மெய்ஞ்ஞான முத்தியருள்வாய்
வெளியினிற் சென்றலை புலன்களா லறிவரிய
வித்தகத்துரியவொளியே
வேதாந்த சித்தாந்த மாதியாறந்தமும்
விளக்குபர ஞான குருவே. 5

மெய்வாய் கண்மூக்கு செவியைந்தையுமடக்கிடின்
மெய்ஞ்ஞானவொளி காணலாம்
மேலான முத்திநல மெய்தலா மென்றெலா
மேலவரும் ஓதுகின்றூர்
மெய்வாய் கண்மூக்கு செவியைந்தையு மடக்கும்வழி
மெய்யனே அணுவுமறியேன்

மெய்வாய் கண்மூக்கு செவிகொண்டு காமாதிவெறி
    மிஞ்சியழி வெய்துகின்றேன்
மெய்வாய் கண்மூக்கு செவியைந்தையு மடக்கும்வழி
    மிகவெளிது காட்டியருள்வாய்
மேலான நின்னருட் ஜோதியுட் காட்டுவாய்
    மெய்ஞ்ஞான வீடருளுவாய்
மெய்வாய் கண்மூக்கு செவி கொண்டறிவதற்கரிய
    மேதக்க ஞானவொளியே
மேகங்களும் நிகர் சொலற்கரிய கருணையொடு
    மேதினியில் வந்த குருவே. 6

சுவையொளி யொடுரேசை நாற்றமெனு மைந்தின்
    தொடக்கறுத்துள் நோக்கில் நின்
ஜோதியொளி காணலாம் முத்தி பெறலாமெனச்
    சொற்றன மறைகளெல்லாம்
சுவையொளி யொடுரேசை நாற்றமெனு மைந்தின்
    தொடக்கினையறுக்க வறியேன்
ஜோதியொளி காணவறியேன் காமமென்னும்
    சுழிக்குளாழ்ந்தே யழிகிறேன்

சுவையொளி யொடுரேசை நாற்றமெனு மைந்தின்
    தொடக்கறுத்துள் நோக்கி நின்
ஜோதியொளி கண்டுமுத்திப் பேறு பெற அருள்
    துணை நல்கி யாண்டருளுவாய்
சுவையொளி யொடுரேசை நாற்றமெனு மைந்தும்
    தொடற்கரிய ஜோதி மயமே
தூலசூக்கும காரணம் மகா காரணம்
    தோன்ற அருள் ஞானகுருவே. 7

பொறி வாயிலைந்தையு மவித்தருளினால் நினது
    பொய் தீரொழுக்க நெறியில்
புகுந்த வரெலாம் ஜோதி கண்டின்ப வீட்டினிற்
    பொலியலாம் என்பர் பெரியோர்

பொறி வாயிலைந்தையு மவித்தருளினுல் நினது
    பொய்தீ ரொழுக்க நெறியில்
புகுகிலேன் காமாதி துர்க்குணத் தாழ்ந்தே
    புலம்பிக் கலங்குகின்றேன்
பொறிவாயிலைந்தையும் நினருளாலவித்துநின்
    பொய்தீ ரொழுக்க நெறியில்
புகுவித்தருட் ஜோதி காட்டியுயர் வீட்டிற்
    பொருத்தி மெய்ப் பொலி வருளுவாய்
பொறிவாயிலைந்தினுற் காணரியவடிவமே
    பொய்மை தவிர் மெய் வடிவமே
போக்குவரவற் றெங்கணும் பொலியும் வடிவமே
    போத சற்குருநாதனே. 8

ஆமைபோலைந்தையு மடக்கியுள் நோக்கில்நின்
    அருட்ஜோதி கண்டுய்யலாம்
அழிவற்ற பேரின்ப வீடெய்தலாமென
    அறைந்தன மறைகளெல்லாம்
ஆமைபோலைந்தையும் அடக்கியுள் நோக்கிடற்
    கணுவளவும் நானறிகிலேன்
அளவற்ற காமவெறி சினமாதி கொண்டிந்த
    அவனிமிசை பாழ்படுகிறேன்.
ஆமைபோலைந்தையும் அடக்கியுள் நோக்குமெய்
    யறிவெனக் கீந்தருளுவாய்
அழிவற்ற பேரின்ப முத்தி வீடெய்தும் வரம்
    அடியனேற் கீந்தருளுவாய்
ஆமைபோலைந்தையும் அடக்க வறியார் எளிதில்
    அறிவரிய மெய்ஞ்ஞானியே
அருளென்ன எஞ்ஞான்றும் எப்பக்கமும் பரந்
    தடியவரையோம்பு குருவே. 9

எண்ணமொழி செயலேதும் இல்லாதடங் கில்நின்
    எழிற்சோதி கண்டுய்யலாம்
இனிபிறவி யெய்தாத முத்திபெற லாமென
    இயம்பின மறைகளெல்லாம்

எண்ணமொழி செயலேது மின்றியுளடங்குநல்
வியப்பனுவு மேழையற்யேன்
எண்ணமொழி செயல் கொண்டு காமாதி மிக மிஞ்சி
யிங்கவதி யெய்துகின்றேன்
எண்ணமொழி செயலேது மின்றியுளடங்குநல்
லியல்பினையுணர்த்தி யருள்வாய்
இனிபிறவி யெய்தாத பேரின்ப முத்தி நலம்
எய்தியுய்தற் கருளுவாய்
எண்ண மொழி செயலேதும் எளிது ணருதற்கரிய
இயல்புடைய மோன முனியே
இனி பிறவி யெய்தாத முக்தி நெறி எளிதருள
இவ்வுலகில் வந்த குருவே. 10

அடங்கியு ளொடுங்கிடின் அருட்ஜோதி காணலாம்
ஆனந்த வீடெய்தலாம்
அறிந்துய்க அருளாற் பயின்றுய்க என்றே
அறைந்தன மறைக ளெல்லாம்
அடங்கியுளொடுங் தம் வழியனு வளவு மறியேன்
அருட்ஜோதி காண அறியேன்
அளவற்ற காமவெறி சினமாதி கொண்டிங்
கலைந்த வதியுற் றழிகிறேன்
அடங்கியு வொடுங் தும் வழியடியனேற் கினிது மெய்
யன்போடுணர்த்தி யருள்வாய்
அருட்பெருஞ் ஜோதியைக் காட்டியானந்த வீ
டடையும் வழிகாட்டி யருள்வாய்
அடங்கியு ளொடுங்கிடார் அறிவரிய ஜோதியே
அமைதி தரவல நீதியே
அனைத்துயிரும் நடை பயிலுமன் பான வீதியே
அருளின்ப அனுபூதியே. 11

# 12. அருள் வேட்டல்

[ கலி விருத்தம் ]

சத்து ருக்கொள் தயானந்த மூர்த்திநீ
சித்து ருக்கொள் சிறப்புடை யண்ணல்நீ
வத்து தத்துவ வாய்மை சொல் லப்பன்நீ
தத்து வாதீத மாயொளிர் தன்மையே. 1

பொன்னும் நீபன் மணியின் பொலிவுநீ
மின்னுநீ மழையைப் பொழிமேகம் நீ
என்னுளென்றும் இருந்தருள் ஏகன் நீ
மன்னு மன்பர்க்கு வாழ்வருள் வண்மையே. 2

இருடியர் பட்டியென்னும் தலத்தினில்
பருதி யொத்துப் பிறங்கும் பகவன் நீ
வருதி யென்றெமை வாழ்த்தி யழைக்கும் நின்
சுருதியின் புகழ் சொல்லும் தரத்ததோ ? 3

பக்குவம் செய்ய எண்ணிப் பரிவொடே
அக்க மொன்றருள் பெய்தழைத் தாட்சிசெய்
தக்க சற்குருவே நினதாள் மலர்
புக்கி லங்குநற் பொற்பை யருள்கவே. 4

வேதமாகம மாதி விளம் பொருட்
போத மார்க்கம் புகட்டும் குருபரா
ஏத மொன்று மிலாததிற் புக்குநின்
பாதமெய்தும் பரிசெனக் கீகவே. 5

அன்பெனும் வடிவொன்றி யணைத்துயிர்
துன்பம் நீக்கும் வழியொன்று சொன்னநின்
பொன்புரை தயவை நிதம் போற்றியே
இன்புறும் வரமொன்றெனக் கீகவே.

கல்லிற்றேரை கருப்பை யுயிர்க்குநற்
புல்லு ணுவளித்தே நனிபோற்றும் நீ
சொல்லும் மலர்க் கத்தி லேகிநின் தொண்டுசெய்
நல்ல பேறெற்கு நல்கரு ளாளனே. 7

எண்ணெ டேயெழுத் தாகி யிலங்கிடும்
புண்ணியா நின்புகழ் சொலற்பாலதோ ?
மண்ணில் வாழும் வழிசொல் வள்ளால்நினை
விண்ணுளார் தொழு தேத்துவர் மெய்ம்மையே. 8

சட்டமென் றுன்று தந்தருளும்நினை
அட்டதிக்கும் அழகுறப் போற்றுமால்
துட்டனென்னைத் திருத்திநின் தொண்டுசெய்
சிட்டனுக்குக என்னிட்ட தெய்வமே. 9

அந்த மாதியிலா அருட்ஜோதியைச்
சொந்தமாக்க வழியொன்று சொல்பவர்
நிந்தைசால்நெறி சாரெனை நின்னடிக்
கெந்த வாறழைப் பாயோ இறைவனே. 10

துஞ்சல் தோன்றலிலாது சுகம் பெறும்
விஞ்சைகண்டு விளக்கினை யாவர்க்கும்
வஞ்சமொன்று மனத்தெனை வாழ்வித்துக்
கஞ்சநேர்கழல் காட்டியணைப்பையே. 11

காலம் கற்பனை காணற் கரிதெனும்
மூலம் கண்டு மொழிந்தனை சட்டம் நீ
சாலநன்றதைப் பேணும் தகை மைதந்
தேவ வென்னையும் ஆண்டருள்கவே. 12

மண்டலங்கள் பலவும் மதித்திடத்
தொண்டராம் நெறி சொன்ன மெய்ஞ்ஞானியே
புண்டயங் குளப்புல்ல னெனக்கும்நின்
தொண்டளித்துச் சுகத்தை யருள்கவே. 13

கற்றிடாது கலைகளெல்லாமுணர்
நற்றவா நினை நான் தொழுமா றெதோ ?
பற்றதாவொரு சட்டம் பரிந்தருள்
சுற்றமேயடி யார்தம் துணைவனே. 14

என்று மெய்யின்ப மெய்தியிலங்கிட
ஒன்று நன்னெறி யென்றிங் குரைப்பவா !
மன்று ளார்நடம் கண்டு மகிழ்பவா !
நன்றெனைப்புரந் தாள்க நரேசனே. 15

நம்புகென்று நெறியொன்று நல்கிடும்
நம்பியே நினை நான் தொழ வல்லனோ ?
ஐம்புலன்களடங்கும் வழி சொலி
உம்பர் போற்றமுதூட்டி யருள்கவே. 16

வாய்மையே வடிவாக வயங்குநின்
தாய்மை சால் குணம் சாற்றும் தகையதோ ?
சேய்மையிற் றங்கு சேயெனை யீர்த்துநின்
தூய்மை தந்து சுகத்தை யருள்கவே. 17

மேன்மை பற்றகி லாத வெறியனேன்
பான்மை கண்டும் பரிந்தருளாததேன் ?
நான் மறைக்கு மெட்டாப் பொருள் ஞானமீ
தான்ம வர்க்கத்துக் கோதருளாளனே. 18

அருளெனும் பெருஞ் செல்வம் அடியனேன்
இருளறப் பெற்றிங் கின்புற வென்று கொல் ?
மருளறச் சட்ட வாழ்வை வழங்குவோய்
பொருளனைத்தும் புணர்க்கும் புராணனே. 19

விழலையொத்த பொறியின் வினை சுடும்
தழலையொத்த மெய்ஞ்ஞானம் தருதியோ ?
குழலையொத்த மொழிசொல் குரவநின்
நிழலை யொத்தமெய் யன்பர்கள் நேயனே. 20

எழில்மிகும் மிருடிப் பட்டியின் கண்வந்
தழில்நின் றருளைப் பெற வொண்ணுமோ ?
பொழில்கள் மூன்றும் எரிக்கும் புராரிதேர்
விழிலருள் செய் விநாயகன் பத்தனே. 21

ஆணும் பெண்ணும் அனுதினம் அன்புடன்
பேணு மாறெனுர் பெருநெறி தந்தவா
காணும் காட்சியனைத்தும் நின் காட்சியாப்
பூணு மாறருள் பொய்யனெற் கீகவே. 22

செம்மை சாலருட் சட்டத் திருநெறி
இம்மையிற் கொடுத் தெம்துயர் தீர்த்தருள்
அம்மையே அப்பனே யருளாளனே
வெம்மை தீர்த்துள் விளங்கும் குரவனே. 23

சத்தி சாலருட் சட்டத் திருநெறி
பத்தி மிஞ்சவிப் பாருக் களித்தவா
சித்தி யாவும் செறிசிவ யோகனே
முத்தி யின்பத்துள் மூழ்கும் முதல்வனே. 24

நந்தி யாதி கணங்கள் நயந்து சூழ்
அந்தி நேர் நிறத்தண்ணல் விநாயகன்
செந்திருப்பதச் சேவை பெற்றின் தவம்
முந்தி பூண்டவ ஓர்சொல் மொழிவையே. 25

காட்டில் வாழ்விலங்கொத்த கடையனேன்
நாட்டில் நின்னருள் நாட்டம் பெறுவனே
பாட்டில்யோகப் பயன்க ளமைத்து நல்
வீட்டியல்பை விளக்கும் விமலனே. 26

யாண்டிருப்பினும் இந்நெறிபேணுகென்
றீண்டொர் செந்நெறியீந்தருள் தெய்வமே
வேண்டும் நல்வரம் யாவும் விரைந்தருள்
ஆண்டயா நினைப் போற்ற அருள்கவே. 27

கையிலங்கு பொருளும் தொழில்களும்
மெய்யிலங்குயர் சக்தியும் மெய்யநின்
பொய்யில் நன்னெறி பேணப் புரிந்தருள்
ஐயநின்புகழ் ஆர்சொல வல்லரே ? 28

வானநாடரும் வாழ்த்தி வணங்கும்நின்
ஞான நாடகம் நான்சொலற் பாலதோ ?
தீனர்கட் கோர்திருநெறி செப்பிடும்
மோனமாதவனே முனிராஜனே. 29

மாற்றுயர்ந்த செம்பொன்னென மன்னருட்
பேற்றை யெய்திப் பிறங்கிடச் செய்வையோ ?
கூற்றை வென்ற குணாள கருணையாம்
ஊற்றருள் நெறியொன்று நல்கன்பனே. 30

சான்றவர் பலர் போற்றருட் சட்டத்தை
ஈன்றுயிர்த்திரட் கீயு முதாரனே
நான்றவிர்ந்த நலஞ்செறி ஞானியே
மூன்றவித்த முழுத்தவ மோனியே. 31

வேதனைகள் தவிர்க்கும் வியன்நெறி
சாதனையெனத் தந்த தயாளனே
போதனைபல கூறருட் போதனே
சோதனை தவிர்த்தென் னுளம் தோய்கவே. 32

நாரணன் சிவன் நன்று வழுத்திடும்
பூரணன்றனைக் கண்டு பொதிகையில்
காரணத்தவ மோம்பிக் கருணையால்
ஆரணத்துட் பொருள்நவி லப்பனே. 33

காம மிஞ்சி யுழலும் கடையனேன்
நேமமோடு நன்னிட்டை பெற்றுய்வனே
நாம மோதும் நரோத்தமர் யாவரும்
சேமமே பெறச்செய் குருநாதனே. 34

தேவைகுன்றத் திருவடிப் பேறுறச்
சேவை தந்தருள் செய்குரு நாதஎன்
நாவை நாமம் நவின்றுய்ய வைத்துளப்
பூவைநின் தளியாக்கிப் பொலிகவே. 35

கண்ணும்நீ யிருகண்ணின் மணியும்நீ
பண்ணும்நீ பலபாட்டும் பொருளும்நீ
உண்ணும் ஊணும் உடையும் பொருளும்நீ
எண்ணு மாறுனை எவ்வணம் எந்தையே. 36

கங்கையாதி கடவுள் நதிகளின்
துங்கம்யாவும் நின் தூநெறி யின்வளம்
பொங்கு தண்ணீர் புலருமுன் ஆடுவோர்க்
கிங்கணெய்த அருளினை ஏகனே. 37

நூறுகோடி யெனமலி நோய்களும்
கூறுபல்வி தப் பேயின் கொடுமையும்
நீறுதீர்த்தம் நெருங்கிடில் நீறதாம்
பேறுநல்கிப் பிறங்கரு ளாளனே. 38

ஓடுசிந்தை யொடுக்கித் தவத்தினல்
பீடுதங்கு பெருநெறி கண்டனை
ஏடுகொண்டிங் கெழுதரி துன்புகழ்
ஈடுமாநிலத் தேதுனக் கெந்தையே? 39

ஆயநுண் கலையாயிரம் கற்பவர்
சாயைகண்டு தருக்கித் திரிபவர்
காய கற்பங்கள் நாடுநர் காணுறத்
தூய நன்னெறி தந்தனை தூயனே. 40

இச்சையேது மிலாதவியல்பினர்
இச்ச கத்திலிணையற் றுயர்ந்திட
வைச்சருள் செயும்வள்ளல்நின் வண்பதத்
திச்சையொன் றெனக்கீந்தரு ளெந்தையே. 41

நாடிக் கண்டு நவிலவொண்ணுநெறி
ஈடில் பேறென இப்புவிக் கீந்தனை
ஆடிப்பாடி யரகரா வென்றுனைக்
கூடியுய் வரமீவை குரவனே. 42

சாணிதே பெரிதென்னும் சழக்கனேன்
பூணிலேன் பொறையன்பு பொருந்திலேன்
காணியாகக் கருணை கொடுத்தருள்
வாணிநா வில்வதிய அருள்கவே. 43

பூதிபூசிடும் போலியடி யனேன்
நீதியோடு நினைந்திலன் நின்பதம்
ஆதியந்த மிலாத அருட்பெருஞ்
ஜோதி காட்டி யருள்க சுரேசனே. 44

யோகியாகி உயர்தவம் நாடிலேன்
போகியாகிப் பொருந்தறம் பேணிலேன்
ரோகியாகி உழவெனை நல்லவி
வேகியாக்கி யருள்க விமலனே. 45

நாசியூடு நடையிடு காலெனும்
வாசிகூடும் வழியுணர்ந் துய்கிலேன்
தூசிபோலலை துட்டனெனக்கும் நின்
ஆசிதந்தினி தாள்க அமலனே. 46

காஞ்சனத் தொடுகா மினியை விழை
வாஞ்சை கொண்டு மயங்கிடுவேற்குநின்
பூஞ்சரண் சற்று காட்டிப் புரந்தருள்
தீஞ்சொல் நல்கும் திருவருளாளனே. 47

பாத பத்மத்திப் பாவிகண் பட்டிடின்
ஏதமேது முருதினி என்சிரம்
வாதப் போதினைச் சூடப் பரிந்தருள்
நாதனே பரஞானவி நோதனே. 48

கண்கொளாத் திருக்காட்சி நிறைந்து பல்
பண்கொள் நின்பதம் பாவமிகுத்தவென்
கண்கள் கண்டிடின் கண்ணெச்சி லெய்துமோ
விண்கொள் தேவர் வழுத்தும் விமலனே. 49

பாலும் பஞ்ச வமுதும் பழங்களும்
ஏலவே யபிடேகம் இயற்றுவோர்
ஞாலமீதுயச் செய்குரு நாதநின்
மூலமந்திரம் எற்கும் மொழிவையே. 50

அன்பொடேயடி யார்கட் கருத்துவோர்
இன்புறப் புரிஎன் குருநாதனே
வன்பு கொண்ட மனத்தமி யேற்குறு
துன்பு தீர்த்தருள் தந்துட் சுடர்கவே. 51

---

## 13. எங்கள் குருநாதன்

எங்கள் குருநாதனடி எங்கள் குருநாதன்
எவ்வரமும் தந்தருள்வான் எங்கள் குருநாதன்
அருள் வடிவாம் அண்ணலடி எங்கள் குருநாதன்
ஆனந்த அமுதருள்வான் எங்கள் குருநாதன்
இகபர நன்னெறி யருள்வான் எங்கள் குருநாதன்
ஈகைமிகும் பண்பனடி எங்கள் குருநாதன்
உத்தமர்கட் குள்ளொளிர்வான் எங்கள் குருநாதன்
ஊழ்வினையை ஓட்டிடுவான் எங்கள் குருநாதன்
என்றும் எங்கும் நின்றொளிர்வான் எங்கள் குருநாதன்
ஏக்கமெலாம் நீக்கிடுவான் எங்கள் குருநாதன்
ஐங்கரனைக் கண்டணைந்தான் எங்கள் குருநாதன்
ஒன்றுபொருள் என்றுரைத்தான் எங்கள் குருநாதன்
ஓது மறைக்குட் பொருள்காண் எங்கள் குருநாதன்
ஔடதமாய் நீறருள்வான் எங்கள் குருநாதன்
அஃகலிலா மெய்ப்பொருளாம் எங்கள் குருநாதன்
எங்கள் குருநாதனடி எங்கள் குருநாதன்
எவ்வரமும் தந்தருள்வான் எங்கள் குருநாதன்.

# 14. நிலை அறிவுறுத்தல்

அருள் பெறுமா றெண்ணுதி யேல் நெஞ்சே நீவா
　　அநுதினமும் அதிகாலை தண்ணீராடி
தெருள் விளக்கும் தேசிகனுர் பதம் நினைந்தே
　　திருநீற்றை அன்புடனே அணிந்து கொண்டு
பொருளனைத்தும் தரு சட்டம் புவிக்கே யீந்து
　　புரந்தருளும் புண்ணியனே போத மூட்டும்
குருபரனே குறைகளெலாம் நீக்கிப் பேணும்
　　கோமானே யென்றுருகிக் கூறு நில்லே. ௧

நலம்பெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
　　நாணுளும் அதிகாலை தண்ணீராடி
குலம் விளக்கும் குருபரனுர் பதம் நினைந்தே
　　கும்பிட்டு நீறணிந்து மெய்யன்போடும்
தலம் பிறங்கும் ஐங்கரனுர் கோயிற்கேகித்
　　தாழ்ந்து பணிந்தினிது வலம் செய்து போற்றிப்
பலன்தரு தீர்த்தம் பருகிப் பலநோய் நீங்கிப்
　　பரஞான குருநாமம் பகரா நில்லே. ௨

வாழ்வுபெற எண்ணுதியேல் நெஞ்சே நீவா
　　வளமனைத்தும் செறி இருடிப் பட்டிக்கேகித்
தாழ்வனைத்தும் தவிர்க்குரவோன் கோயில் நாடித்
　　தாழ்ந்து பணிந்தல கிட்டுமெழுக்கு மிட்டு
ஏழ்பிறவிப் பிணிதவிர்ப்பா யென நன்றேத்தி
　　இனிதுதிருவிளக் கேற்றிப் பூசை செய்தே
ஊழ்விலக்கும் சட்டநெறி யுன்னிப் போற்றி
　　உவந்து குருநாதா என்றுருகா நில்லே. ௩

சுகம் பெறுதற் கெண்ணுதியேல் நெஞ்சேவா
துலங்கொளி சூழதி காலை தண்ணீராடி
இகம்பரம் நல்கிடு திருநீறணிந்து நீரே
டெழிற்றுளபம் சேர்தீர்த்தமினி தருந்திச்
சகம் திருத்தும் குருபரனுர் சட்டம் பேணிச்
சத்தியமன் பறம்போற்றித் தகவார் தூய
யுகம் படைக்கும் குருமணியே இருடிப் பட்டி
உவந்த மர்ந்தபதியே யென்று றுருகா நில்லே. 4

இன்பமுறற் கெண்ணுதியேல் நெஞ்சே நீவா
இருமைநலம் தருமிருடிப்பட்டிக் கேகி
அன்புடனே குருநாதன் கோயில் நாடி
அடிபரவிப் பணிந்தேத்தி வலம் புரிந்து
துன்பமெலாம் தவிர்சட்ட நெறியே போற்றித்
தூயமனம் மொழி செயல்களாலுய் வுற்றுப்
பொன் பிறங்கு மலர்ப்பதங்கள் துணையாக் கொண்டே
புனித குருமணியே யென்றுருகா நில்லே. 5

சாந்திபெற எண்ணுதியேல் மனனே நீவா
தகவொடதி காலையினில் தண்ணீராடி
நீந்தரிதாம் எழுபிறவிக் கடல் கடத்தும்
நீறுதிரு நெற்றியிலே நிறையப் பூசித்
தீந்தமிழ் நாட்டின் தவப்பே றெனவே போந்த
தேசிகனுரருள் தீர்த்தம் பருகிமேலாம்
காந்த மதைக் கண்ட இரும்புத் தூளென்னக்
கலக்கவிழைந் துள்ளுருகிக் கரையா நில்லே. 6

அமைதிபெற எண்ணுதியேல் மனனே நீவா
அனுதினமும் அதிகாலை தண்ணீராடி
இமையளவு பொழுதும் விலகாமற் காக்கும்
இனிய குருபரன் பாதம் போற்றிக்கன்மச்
சுமை கரைக்கும் சட்டநெறியன் பாய்ப்பேணித்
துரிய நிலை வழங்கு முயர் நிட்டை போற்றி
உமை மகன்றனருள் பெற்றிவ்வு லகுக்கூட்டும்
ஒப்பில் குருபரனே யென்றுருகா நில்லே. 7

தூய்மைபெற எண்ணுதியேல் மனமே நீவா
சுகமனைத்தும் தருமிருடிப் பட்டிக்கேகி
வாய்மை மிகும் குருநாதன் கோயில் நாடி
வலம்புரிந்து பணிந்தேத்தி வரங்கள் நல்கும்
தாய்மைநிறை திருவுளங் கொள் தலைவா என்றும்
தவம் விளக்கிய வம்விலக்கும் சதுரா என்றும்
சேய்மையுடன் அண்மை யுமாம் செல்வா என்றும்
தினம் தினமும் உள்ளுருகிச் செப்பா நில்லே. 8

புனிதமுற எண்ணுதியேல் மனமே நீவா
புலர்வதன் முன்துயில் நீத்துத் தண்ணீராடி
இனிதுதிரு நீறணிந்து தீர்த்தம் சாப்பிட்(டு)
இன்பமிகு குருநாதன் பதங்கள் போற்றி
மனிதகுலம் ஏனையுயிர்க் குலமும் உய்யும்
வழியான அருட்சட்ட நெறியே பேணிக்
கனிதரு நல்விரதமெனக் கறகண்டென்னக்
கருணைபுரி குருவேயென்று ருகா நில்லே. 9

நிறைவு பெற எண்ணுதியேல் மனமே நீவா
நித்தமுமே அதிகாலை தண்ணீராடி
மறைமுடிவில் நடனமிடும் குருவின் பாத
மலர்நினைந்து நீறணிந்து தீர்த்தம் சாப்பிட்
டிறைவடிவா மிவ்வுலக மெல்லா மென்றே
எண்ணியருட் சட்டநெறி யினிதே பேணித்
திறைவிலக்கித் துறை விளக்கும் இருடிப் பட்டித்
தேசிகனார் திருநாமம் செப்பா நில்லே. 10

# 15. திரு அங்கமாலை

[ வெண்பா ]

அஞ்சேலென் நெஞ்சே தென்னாலவாய் வைகைபால்
விஞ்சேர் விநாயகன்றன் மேனியைக் கண்டோமென்றும்
செஞ்சொற் கேட்டன்றுருகிச் சென்றணைத்துக் கொண்ட
பிரான்
அஞ்சொற் கேட்டஞ்சி நட. 1

பாத்திரங்களெல்லாம் பசும்பொனெனப் பாராமல்
நேத்திரமே என்சொற்கேள் நேர்மையுடன்—சூத்திரங்கள்
எல்லாம் தன்கைக்கொண்டினிது நடத்தென்னுசான்
சொல்லார் திருவடியைச் சூழ். 2

ஏதேதோ பேசாமல் என்வாயே இப்புவிமேல்
சூதேது மில்லாமல் தூய்மையுடன்—தீதேதும்
இல்லாத் திருநெறி தந்தெவ்வுயிரையும் புரக்கும்
நல்லான் புகழே நவில். 3

எங்கெங்கோ சென்றலையும் என்னிரண்டு பாதங்காள்
துங்கமிகும் சட்டமொன்று சொல்லி யருகழைத்துப்
பொங்கிடு மெய்யின்பம் புகட்டியருள் போதனமர்
தங்கநிகர் கோயில் நிதம் சார். 4

ஊனென்றே நாடி உழைத் தெய்க்கும் என் கரங்காள்
சேனென்று தெய்வ நெறி செம்மையுறக்—கானென்று
காட்டிப் புரந்தருள் நம் கர்த்தன் திருப்பணியே
நாட்டிற் செய்துய் மின் நயந்து. 5

எல்லாச் சொல்லுங்கேட்கும் என் செவிகாள் இன்று முதல்
நல்லார் சேர்நற் சட்டம் நன்றளித்துப் பேணியருள்
வல்லாளன் சொல்லாளன் வள்ளலவன் வண்கீர்த்தி
யல்லாற்கே ளாதீரிங் காய்ந்து. 6

வணங்கிப் பணியாத் தலையே வழியோ
டிணங்கிடுவாய் சற்றிங்கினிதே—குணங்குறியில்
வள்ள லருள்சார் வழி தந்து பேணியருள்
வள்ளலை நீ நாளும் வணங்கு. 7

உண்டுறங்கி வாழ்நா ளொழிக்கின்ற என்னுடம்பே
விண்டிடுமென் சொற் கேட்பாய் மேன்மையுற—வெண்டிருநீ
றீந்து பிணியகற்றும் எம்மான் அருட்செயல்கள்
டாய்ந்துருகி நிட்டையில் நன்றாழ். 8

மூச்சுவிடு மூக்கே மொழியும் சிலநாளுள்
ஆச்சுதென ஆயுள்தானுகாதோ—மூச்சுவிடா
துள்ளாழ்ந்தருட் சோதிகாண உதவிடுவாய்
கொள்வா யருள்சார் குறி. 9

பிறவியென என்னைப் பிணித்த பிணியேஉட்
டுறவி யருளாசான் சொற்கேட்—டுறவென்பாற்
கொள்ளாமல் நீங்கிடுவாய் கோன்நீறு கொன்றுவிடும்
விள்ளாமற் செல்வாய் விரைந்து. 10

# 16. வாழ்த்து

இன்பமெலாம் எவ்வுயிர்க்கும் ஈந்தருளும்
இருடிநகர் இறைவன் வாழ்க
மன்பதைகட் கருண் சுரந்து பேணியருள்
அருட்சட்ட மாண்பு வாழ்க
அன்பும் மனத்திண்மையுங்கொண் டருட்சட்டம்
பேணடியர் அன்பர் வாழ்க
பொன்புகழ்மெய் யின்பெய்தி எவ்வுயிரும்
இறையருளால் பொலிந்து வாழ்க.



# ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்



பரம ஏழைகளும் பக்குவம் பெற அருள்ஞானச் சட்டத்தை இவ்வுலகிற்கு அருளிய குருபரம் பொருளின் திருவருள் பெருமையை இவ்வுலகில் பரப்புவான் வேண்டி, அக்குரு அருளாலே இப்பதிப்பகம் அண்மையில், சென்னை மாநகரில் 16—5—1971ல் துவக்கப் பெற்றது. இப்பதிப்பகத்தின் நோக்கம், உலகிலுள்ள எல்லா மக்களும் அருட்சட்டநெறி நின்று, அருளாட்சி வழி நடந்து, சாதி, சமய, மத பேதமற்று, எங்கும் நின்று இலங்கும் இறை இன்பத்தை யடைந்து உய்வதுவேயாம். மேலும் விரிவுகள் பெற விழைவோர் கீழ்க்கண்ட முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்
இலக்கியப் பதிப்பகம்
அடியார்கள் இல்லம் : தொலைபேசி எண் : 34600
32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1.